# சொல்வயல்

## திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம் நெல்வளமே நாட்டின்வளம்

" சொற்குவை தேரும் பாவலர் மேவத் தொகுப்பீடம்"
(திருவிளையாடற்புராணம்–
தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்)

ஐ.எஸ்.பி.என் (ISBN): 978-81-958032-0-0

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 4 விளைச்சல் : 39 திருவள்ளுவர் ஆண்டு 2054 ஆகத்து – 2023

உள்ளே...












# நூலகத் துறைக் கலைச்சொற்கள்

| | | |
|---|---|---|
| Academic libraries | – | கல்வி நூலகங்கள் |
| Author catalogue | – | நூலாசிரியர் பட்டியல் |
| Bibliography | – | கருவிநூற் பட்டியல் |
| Branch library | – | கிளை நூலகம் |
| Business library | – | வணிக நூலகம் |
| Card cabinet | – | அட்டை இழுப்பறைப் பெட்டி |
| Catalogue card | – | பட்டியல் அட்டை |
| Catalogue entry | – | பதிவுப் பட்டியல் |
| Children's library | – | சிறுவர் நூலகம் |
| Circulating library | – | சுற்றனுப்பு நூலகம் |
| Departmental library | – | துறை நூலகம் |
| Encyclopaedia | – | கலைக் களஞ்சியம் |
| Gangway guide | – | நூலடுக்கிடைக் காட்டி |
| Gate register | – | நுழைவுப் பதிவேடு |
| Lending section | – | நூல் இரவல் பெறும் பிரிவு |
| Library act | – | நூலகச் சட்டம் |
| Library science | – | நூலக அறிவியல் |
| Membership card | – | உறுப்பினர் அட்டை |
| Mobile library | – | நடமாடும் நூலகம் |
| Reference librarian | – | குறிப்புதவி நூலகர் |
| Reference library | – | குறிப்புதவி நூலகம் |
| Research library | – | ஆய்வு நூலகம் |
| Stack room | – | அடுக்கறை |
| Standard card | – | நிலை அட்டை |
| Subscription | – | முறைக் கட்டணம் |

**சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.**


# சொல்வயல்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு
திருவள்ளுவர் ஆண்டு 2054 கடகம் (ஆடி)
ஆகத்து – 2023

ஆசிரியர் : முனைவர் கோ.விசயராகவன்
இயக்குநர்

பொறுப்பாசிரியர் : முனைவர் வே. கார்த்திக்

இதழ்க்குழு : திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திருமதி. க. கத்தூரி



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர்,
சென்னை – 600 028.
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com

Directorate of Tamil Etymological Dictionary Project,
First floor, Urban Administrative office Campus,
No:75,Santhome high Road,
MRC Nagar, Chennai-28
Mail id : solvayal@gmail.com
Website : www.sorkuvai.com



ஐ.எஸ்.பி.என் (ISBN): 978-81-958032-0-0

# இளையோரே எழுக! கலைச்சொல்லாக்கம் புரிக!

பொருள் தெரியாத சொற்களுக்குப் பொருள் கூறுவது அகராதியாகும். ஆனால் பொருள் தெரிந்த பிறமொழிச்சொற்களுக்குத் தாய்மொழியில் வழக்காற்றுச் சொற்களை அடையாளம் காட்டியும் தேவையான இடத்தில் புதிய சொற்களை உருவாக்கியும் தருவது கலைச்சொல்லாக்கமாகும். கலைச்சொல் எப்போதும் காரணப் பெயராகவே இருக்கும். ஒரு மொழியில் உள்ள கருத்தாழமும் சொற்செறிவும் மிக்க எளிய சொற்கள் கலைச்சொற்கள் எனப்படும். மேலும் அச்சொற்கள் சொற்சிக்கனத்தோடு துல்லியத் தன்மையும் பெற்று விளங்கும். கலைச்சொற்கள் ஒவ்வொரு துறைக்கும் பயன்படுத்த வேண்டியவை ஆகும். கலைச்சொல் மொழியின் வேர்ச்சொல் கொண்டு உருவாக்கப்பட வேண்டும். கலைச்சொல் உருவாக்கத்தால் மொழி புதிய தகைமை பெறுவதோடு, வளர்ச்சியும் பெறுகிறது. கலைச்சொற்கள் என்பவை அன்றாடம் பயன்படுத்தும் கருவிகள், வேளாண்மை, மருத்துவம், பொறியியல், தகவல் தொடர்பு நுட்பங்கள் என அவரவர் தம் தாய்மொழியில் அதற்கான பொருளை வைத்தல் ஆகும். உலகின் எப்பகுதியிலும் எவ்வகைக் கண்டுபிடிப்புகள் நிகழ்ந்தாலும் சப்பானியர் உடனுக்குடன் தம் தாய்மொழியில் அதனை ஆக்கம் செய்து கொள்கின்றனர். அதனால் தாய்மொழி வழியில் அறிவியல் தொழில்நுட்பச் சொற்களைக் கற்கின்றனர். அதனால் சப்பானில் நாள்தோறும் புதிய கண்டுபிடிப்புகள் நிகழ்ந்த வண்ணம் உள்ளன.

மூலமொழிச் சொற்களின் பொருளினை நுட்பமாக அறிந்து கொண்டால் தமிழில் கலைச்சொல்லாக்கம் செம்மையாக அமையும். மூலமொழியில் பயன்படுத்தப்பட்ட சூழலுக்கும் தமிழ்மொழியின் சொல்லுக்கும் உள்ள உறவினை ஆராய்ந்து உருவாக்கப்படும் கலைச்சொல் பொருத்தமானதாக இருக்கும்.

- பழந்தமிழ் இலக்கியச் சொற்களைப் பயன்படுத்துதல்
- Pilot – வலவன்
- பேச்சுமொழியிலிருந்து கலைச்சொல்லாக்கம்
- Small Pox – அம்மை,
- புதுச் சொல்லாக்கம்
- Molecule – மூலக்கூறு
- உலக வழக்கை ஏற்றுச் சொல்புனைதல்
- X-ray – ஊடு கதிர்
- பிறமொழிச் சொற்களை மொழிபெயர்த்துக் கலைச்சொல் உருவாக்கல்
- Photograph – ஒளிப்படம்
- மாற்றம் இல்லாமல் ஒலிபெயர்த்துப் பயன்படுத்த வேண்டிய சொற்கள்
- Meter – மீட்டர் ,
- Ohm – ஓம்

இவ்விதம் கலைச்சொற்களை உருவாக்குவதில் பல்வேறு வழிமுறைகள் பின்பற்றப்படுவதாக அறிஞர் வா.செ. குழந்தைசாமி குறிப்பிடுகிறார்.

மருத்துவம் சார்ந்த கலைச்சொற்கள்

Clinic – மருத்துவகம்
Blood group –குருதிப்பிரிவு
Compounder – மருந்தாளுநர்
Typhoid –குடற்காய்ச்சல்
Ointment – களிம்பு

கல்வித்துறை சார்ந்த கலைச்சொற்கள்

Note book – எழுதுசுவடி
Answer book – விடைச்சுவடி

Prospectus – விளக்கச்சுவடி

அன்றாடம் பயன்படுத்தும் ஆங்கிலச் சொற்களுக்கு இணையான தமிழ்ச் சொற்கள்

Smart phone –திறன்பேசி
Blog –வலைப்பூ
Despatch – அனுப்புகை
Carrom – சுண்டாட்டம்
Plastic – நெகிழி
Straw – உறிஞ்சுகுழல்
Apartment – அடுக்ககம் / தொகுப்புமனை
Ship – நாவாய் / கலம்

நாள்தோறும் துறைதோறும் கண்டுபிடிப்புகள் உருவாகி வந்துகொண்டிருக்கின்றன. இந்தச் சூழலில் அவற்றிற்கெனக் கலைச்சொல்லாக்கங்களும் நிகழ்ந்துகொண்டே உள்ளன. அவை வெறும் ஏட்டளவில் இல்லாமல் பயன்பாட்டிற்கு வருவதே இன்றைய தேவை. அதற்கு இளைய தலைமுறை மாணவர்களின் பங்களிப்பு இன்றியமையாததாகும். கலைச்சொல்லாக்கப் பணி என்பது ஆய்ந்தறிந்த தமிழறிஞர்களின் பணி எனக் கொள்ளாது அனைவரது பணி எனக் கொள்ள வேண்டும். எல்லோரும் ஈடுபட வேண்டும். இப்பணிக்கு இதழ்களும் ஊடகங்களும் துணைபுரிதல் வேண்டும். பேச்சுச் சொற்களையே எழுத்துச் சொற்களாகப் பயன்படுத்தாமல் நம் மொழிக்கேயுரிய தனித்தமிழ்ச் சொற்களைப் பயன்படுத்த வேண்டும்.

மாணவர்களிடையே கலைச்சொற்கள் குறித்த விழிப்புணர்வை ஏற்படுத்த வேண்டும். அதற்கெனவே இயங்கிவருவதுதான் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம். இதன் செயல்பாடுகள் அளப்பரியவை. மொழி மக்களின் அடையாளம். சொற்கள் மொழிக்கு அடிப்படை. சொல்வளமே மொழிவளம் என்பதை எஞ்ஞான்றும் மனத்தில் கொண்டு சொல்வளத்தைப் பெருக்கவும், மாணவச் சமூகத்திற்குக் கலைச்சொற்கள் பற்றிய மொழியுணர்வை ஊட்டவும் செயல்படுகிற இந்த இயக்ககம் 1974 இல் அன்றைய தமிழ்நாட்டின் மாண்புமிகு முதலமைச்சர் **முத்தமிழறிஞர் கலைஞர்** அவர்களால், **மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர்** அவர்ளை முதல் இயக்குநராகக் கொண்டு தொடங்கப்பட்டது. இன்றுவரை தமிழ்மொழியின் ஆக்கப் பணிகளுக்கான செயல்களை முன்னெடுத்தும் முறைப்படுத்தியும் ஆற்றலுடன் செயல்பட்டுவருகிறது. தமிழறிஞர்கள், பேராசிரியர்கள், மாணவர்கள், ஆய்வாளர்கள், தமிழ் ஆர்வலர்கள் மற்றும் வெளிநாடு வாழ் தமிழறிஞர்கள் மூலம் சொற்கள் பெறப்பட்டு, சீராக்கம் செய்யப்பட்டு, 14.08.2023 ஆம் நாள்வரையில் 12,16,492 சொற்கள் சொற்குவை வலைத்தளத்தில் பதிவேற்றம் செய்யப்பெற்று உலக மக்களின் பயன்பாட்டுக்கு வழங்கப்பட்டுள்ளன. மேலும், தமிழ்நாட்டின் பல்வேறு கல்லூரிகளுக்கும் சென்று மாணவச் செல்வங்களுக்குக் கலைச்சொல்லாக்கம் மற்றும் தூயதமிழ்ச் சொற்களின் பயன்பாடு குறித்துப் பயிற்சி வகுப்புகள் நடத்தி, செம்மொழியாம் தமிழ்மொழியின் வளமைக்கு அரண்சேர்த்து வருகிறது இவ்வியக்ககம்.

**"தமிழுயர்ந்தால் தமிழ்நாடு**
**தானுயரும் அறிவுயரும்**
**அறமும் ஓங்கும்"**

என்ற பாவேந்தரின் வரிகளை உள்வாங்கி உணர்ந்து, மொழியின் வேர்ச்சொல்லை அறிந்து அதனடிப்படையில் பொருளாழம் மிக்க தமிழ்க் கலைச்சொற்களை உருவாக்கிட இளையோர் முனைந்து முன்வர வேண்டும். நிற்க.

இவ்வியக்ககம் செயற்படுத்திவருகிற கலைச்சொல்லாக்கம் உள்ளிட்ட மொழிக்காப்புப் பணிகளுக்குத் துணைநிற்கும் அகராதியியலாளர்கள், சொல்லாக்க வல்லுநர்கள், மொழியியலாளர்கள்,

தமிழறிஞர்கள், தமிழார்வலர்கள், ஆய்வாளர்கள், மாணவர்கள் உள்ளிட்ட அனைவருக்கும் இவ்வியக்ககத்தின் சார்பில் நன்றி நவில்கிறேன்.

அகராதியியல் அறிஞர் முனைவர் ச.சச்சிதானந்தம் அவர்களின், "அந்த நிலவை நாம் பார்த்தால்..." என்னும் பொருண்மையிலான கட்டுரையும், பேரா. ப. மருதநாயகம் அவர்களின் "Palamoli Nanuru: Proverbs as Equipment for Living " எனும் ஆங்கிலக் கட்டுரையும், மலேசியத் தமிழ்நெறிக் கழகத்தின் தேசியத் தலைவர் திரு. இரா. திருமாவளவன் அவர்களின், "மேலை மொழியில் விரிந்த தமிழ் 'அம்' " என்னும் கட்டுரையும், செய்யார் – இந்தோ அமெரிக்கன் கல்லூரித் தமிழ்த்துறை உதவிப் பேராசிரியர் முனைவர் வே. அருட்பாமணி அவர்களின், "தமிழ்மொழி கற்பித்தலுக்கு வளமையான தொழில்நுட்பங்களைப் பயன்படுத்தல்" எனும் கட்டுரையும், சென்னை பெண்கள் மேல்நிலைப் பள்ளித் தமிழ் ஆசிரியர் முனைவர் மு. கனகலட்சுமி அவர்களின், "தமிழ் எழுத்துகளின் வரிவடிவப் பிழைகளும் திருத்தங்களும்" எனும் கட்டுரையும் இம்மாதச் "சொல்வயல்" மின்னிதழுக்கு அணிசேர்க்கின்றன. அப்பெருந்தகைகளுக்கு மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

இவ்வியக்ககம் நெறிப்படுத்தும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்குகளில் பங்கேற்றுத் தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரையாற்றிய பலதுறை சார்ந்த அனைத்துத் தமிழுள்ளங்களுக்கும், என் உள்ளார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

பயிலரங்கங்களுக்கான தொழில்நுட்ப ஒருங்கிணைப்பைச் செய்துவரும் சென்னை வேல்சு அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்த்துறை இணைப் பேராசிரியர் முனைவர் இரா. பன்னிருகைவடிவேலன் அவர்களுக்கும் அகம்நிறை அன்பு நன்றியை உரித்தாக்குகிறேன்.

தமிழ் என்னும் ஒற்றைப்புள்ளியில் ஒருங்கிணைந்த உள்ளத்தினராய் என்றென்றும் ஒருங்கிணைந்து செயலாற்றுவோம்...

செயலால் பேசுவோம்...

## 12 இலக்கத்து 16 ஆயிரத்தைக் கடந்தது சொற்குவை



# அந்த நிலவை நாம் பார்த்தால்....



**முனைவர் பேரா. ச.சச்சிதானந்தம்**
இயக்குநர் பன்னாட்டு உயர்(கல்வி) தமிழாய்வு நிறுவனம்,
பாரிசு

" நிலா நிலா ஓடி வா...

நில்லாமல் ஓடி வா...

மலைமீது ஏறி வா...

மல்லிகைப்பூ கொண்டுவா..."

என்பது சின்னவயதில் அம்மாவும் ஆசிரியரும் சொல்லித்தரும் பிள்ளைப் பாட்டு.

"நாளும் கோளும் நலிந்தவர்க்கு இல்லை" என்பது பழமொழியாக இருந்தாலும், உயிரினங்களின் வாழ்க்கையின் முதன் வழியாக நாளும் கோளும் அமைந்திருக்கின்றன. இந்துக்களில் பெரும்பான்மையோர் ஒரு காரியத்தைத் தொடங்க அல்லது செய்யும் முன் நாள், நட்சத்திரம் பார்ப்பது வழக்கம்! இதே போல் இசுலாமியர்களும் பிறை பார்த்து நோன்பை ஆரம்பிப்பார்கள், முடிப்பார்கள்.

கிறித்தவர்கள் உட்பட பிறமதத்தினர் வாழ்க்கை முறைகளிலும் நாள், நட்சத்திரங்கள் பற்றிய நம்பிக்கை உண்டு. சீனர்களும் அறுவடை முடிந்ததும் சந்திரன் விழாவைக் கொண்டாடுகின்றனர். இவர்கள் நாடுவிட்டு வந்து வாழும் நாடுகளிலும் சந்திரன் விழா எடுக்கின்றனர்.

கோளின் நிலைப்பெயர்ச்சியைக் கணக்கிடுவதன் மூலம் நாளின் பலன் அறியப்படுகிறது. நாள் என்பது காலம், நட்சத்திரம் என்பவற்றைக் குறிக்கிறது. கோள் என்பது கிரகங்களைக் குறிக்கிறது. தமக்கென ஒளியில்லாத கிரகங்கள் கோள், மீன் எனவும் பிரிக்கப்பட்டுள்ளன, கோள் எனும் போது பூமி, சூரியன், சந்திரன் என்பன நினைப்பில் முதலிடம் வகிக்கின்றன.

பூமியின் உயிரோட்டமாக, நட்சத்திர கதாநாயகனாகச் சூரியன் விளங்கினாலும், நமது நாட் காரியங்களின் கணிப்பு நாயகனாக சந்திரனே விளங்குகிறது. சித்திரா பௌர்ணமி, ஆடிஅமாவாசை, கார்த்திகைத் திங்கள் என்றும். திதி பார்த்து ஏகாதசி, அட்டமி, நவமி, சதுரத்தி என்றும் சந்திரனை வைத்து விரதங்கள். பலனகள் பார்க்கப்படுகின்றன. சித்தார்த்தர் புத்தரானதும் பௌர்ணமி நாளிலேயே என்பது குறிப்பிடத்தக்கது. பௌர்ணமியின்போது கடல் பொங்குவதும், அமாவாசையின் போது பைத்தியம் அதிகமாவதும் சந்திரனின் நிலையிலேயே தங்கியுள்ளது.

### ஜெர்மனிய மொழிகளில் சந்திரன், திங்கள்

| | ஆங்கிலம், ஜெர்மன், டச்சு |
|---|---|
| சந்திரன் | Moon, Mond, Moon |
| திங்கள் | Monday, Montag, Maandag |

### இலத்தீனிய மொழிகளில் சந்திரன், திங்கள்

| இலத்தீன், பிரெஞ்சு, இத்தாலியம், இஸ்பானியம் |
|---|
| Luna, lune, luna, luna |
| Lunre, dies, lundi, lunedi, lunes |

சந்திரன் ஒரு கடவுள், அவரின் அண்ணன் சூரியன். அவருக்கு 27பத்தினிகள் உண்டு. சந்திரனைப் பாம்பு விழுங்கும்போது கிரகணம் ஏற்படுகிறது. சந்திரனில் ஔவையார் பாக்கு உரல் இடிக்கிறார். நாலாம் பிறையைப் பார்த்தால் நாய் படாப்பாடு பட வேண்டிவரும். சந்திரனில் வளர்பிறை, தேய்பிறை என்றெல்லாம் நம்பிவரும் கதைகளும் நிறைய உண்டு.இவ்வாறெல்லாம்பலநூற்றாண்டுகளாக மனிதன் சந்திரன் பற்றி கருத்துகள், நம்பிக்கைகள் கொண்டிருக்கும்போது அறிவியல் மனிதன் சந்திரனுக்குப் போய்வந்து அரை நூற்றாண்டு ஆகப்போகிறது.

நிலா, அம்புலி, திங்கள், மதி என்பன சந்திரனுக்கு வழங்கும் மறுபெயர்கள். சந்திரனின் நாளாகத் திங்கட்கிழமை கொள்ளப்படுகிறது. இந்நாள் பல மொழிகளில் சந்திரனைக் குறிக்கும் பெயரிலேயே –

ஆங்கிலத்தில் Moon's + day = Monday எனவும், பிரெஞ்சில் Lune + die = Lundi எனவும் வழங்கப்படுகிறது.

விண்வெளியில் கோடிக்கணக்கான நட்சத்திரங்களும் கிரகங்களும் இருக்கின்றன. கோடிக்கணக்கான நட்சத்திரங்களில் பெரியது சூரியன். இந்தச் சூரிய மண்டலத்தில் 9 கிரகங்கள் உள்ளன. இந்த நவகிரகங்களில் பூமியும் ஒன்று. சந்திரன் பூமியின் துணைக்கோள். பூமிக்கும் சந்திரனுக்கும் இடையில் 384,400 கி.மீ. தூரம் உள்ளது. பூமி உட்பட ஒன்பது கிரகங்களும் சூரியனைச் சுற்றி வருகின்றன. பூமி தன்னைதானே சுற்றிவர 27 நாட்கள் 12 மணி நேர காலம் எடுக்கிறது. மாதவிலக்கு அல்லது மாதவிடாய் என்பதும் 28 நாட்களை அடிப்படையாகக் கொண்டது. துணைக்கோளின் மறுபெயர்களில் ஒன்றான திங்கள் மாதத்தைக் குறிக்க கையாளப்படுகிறது. இன்னொரு பெயரான மதிக்குக் காலத்தைக் குறிக்கும் சாரியையான "ஆம்" என்பது பொருட்பின்னொட்டாக வரும்போது மதியம் எனவும், சொற்றிரி ஈறாக வரும்போது மாதம் எனவும் ஆகிறது.

"அந்த நிலவைப் பார்த்தால்... அது எனக்கென / நமக்கென வந்தது போல் இருக்கும்.." என்ற வரிகள் கொண்ட பாட்டு "பவானி" என்ற திரைப்படத்தில் இடம்பெற்றது. அந்த நிலவை ஒருவர் என்ன மனநிலையில் பார்க்கிறாரோ அதற்கேற்ப நிலவு மனத்தை இன்பப்படுத்தும் அல்லது துன்பப்படுத்தும்.

நிலவு தொடர்பான திரைப்படப் பாடல்களில் சில...

| பாடல் | படம் |
|---|---|
| நிலவே நீ சாட்சி... | நிலவே நீ சாட்சி |
| அன்றொரு நாள் இதே நிலவில்... | நாடோடி |
| நிலவு ஒரு பெண்ணாகி ... | உலகம் சுற்றும் வாலிபன் |
| அன்று வந்ததும் இதே நிலா... | பெரிய இடத்துப் பெண் |
| நிலவே என்னிடம் நெருங்காதே... | ராமு |
| நிலாவே வா... | மௌன ராகம் |
| நிலவு தூங்கும் நேரம்... | குங்குமச் சிமிழ் |
| அந்த நிலாவைத்தான் நான் கையில... | முதல் மரியாதை |
| நிலாக் காயுது... நேரம் நல்ல நேரம்... | சகலகலா வல்லவன் |
| நிலா அது வானத்து மேலே... | நாயகன் |
| வான் நிலா நிலா அல்ல... | பட்டினத்து பிரவேசம் |
| நிலவைப் பார்த்து வானம் சொன்னது... | சவாலே சமாளி |
| நிலவுக்கு என்மேல்... | போலீஸ்காரன் மகள் |
| நிலவே முகம் காட்டு... | எஜமான் |
| நிலவும் மலரும் பாடுது... | தேன்நிலவு |
| நிலா நிலா போகுதே... | அரவான் |
| பிள்ளை நிலா... | நீங்கள் கேட்டவை |

## சந்திரன்

பூமிக்கான ஒரேயொரு இயற்கைத் துணைக் கோளும் சூரியக் குடும்பத்திலுள்ள ஐந்தாவது பெரிய துணைக்கோளும் நிலவு ஆகும். இரவிலே குளிர்வாக ஒளிதரும் இக்கோளத்தை வானிலே காணலாம். இது பூமியின் ஒரே இயற்கையான துணைக்கோள். இது பூமியைச் சுற்றி வர சராசரி 29.32 நாட்கள் ஆகின்றது. இந்த நிலா பூமியை ஒரு நீள் வட்டப் பாதையில் சுற்றிவருவதாகக் கண்டுபிடித்துள்ளார்கள். பூமிக்கும் நிலாவுக்கும் சராசரி தொலைவு 384,403 கி.மீ.

கலைகள் என்பது நிலாவின் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு அளவாகத் தெரியும் தனித்தனி நிலைகளைக் குறிப்பன. இதனைப் பிறை என்று சொல்வது பெருவழக்கு. முதல் நாள் நிலாவே தென்படாது. இரவு மிக இருட்டாக இருக்கும். இதனை அமாவாசை என்றும் காருவா நாள் என்றும் அழைப்பர். பிறகு ஒவ்வொரு நாளும் சிறுகச் சிறுக நிலா (வெளிச்சம் தெரியும் பகுதி) பெரிதாகிக்கொண்டே வரும். இவைகளை இரண்டாம் பிறை, மூன்றாம் பிறை என்றும் இரண்டாங்கலை, மூன்றாங்கலை என்றும் நாட்களைச் சொல்வார்கள். பின்னர் சுமார் 14 நாட்கள் கழித்து ஒரு நாள் முழு நிலா பெரிதாய் வட்ட வடிவமாய்த் தெரியும். இதனை முழு நிலா நாள் என்றும் பௌர்ணமி நாள் என்றும் சொல்வர். பிறகு அடுத்த சில நாட்கள் நிலா சிறுகச் சிறுகத் தேய்ந்து கொண்டே போய், மீண்டும் காருவா நாளுக்கான நிலைக்கே திரும்பி விடும். முதலில் முழுநிலா நாள் வரை வளர்ந்து வருவதை வளர்பிறை என்றும், அடுத்த சுமார் 14 நாட்களைத் தேய்பிறை என்றும் அழைப்பர். நிலா நம் பூமியைச் சுற்றி வருகையிலே எப்படி கதிரொளி நிலாக் கோளத்தின் மீது பட்டு பூமியில் தெரிகிறது என்பதைக் கீழே உள்ள படம் விளக்குகிறது.




புவியின் ஈர்ப்பைக் காட்டிலும் நிலவின் ஈர்ப்பு ஆறுமடங்கு குறைவு. பூமியில் ஈர்ப்பு விசை அதிகமாக இருப்பதால் புவியில் ஒரு பொருளின் விடுபடு வேகம் (escape speed) அதிகம். மேலும் புவிப்பரப்பு வெப்பநிலையும் அதிகம் இல்லை. இவ்விரு காரணங்களால் காற்று மூலக்கூறுகள் புவியின் ஈர்ப்பை விட்டு விடுபட முடியாது.

# Palamoli Nānūru: Proverbs as Equipment for Living



Dr. P. Marutha Nayagam

In an insightful and far-reaching discussion of proverbs in an essay entitled "Literature as Equipment for Living", Kenneth Burke, often compared to Coleridge for the wide range of his critical output, convincingly substantiates the view that the most complex and sophisticated works of art could be considered "somewhat as proverbs writ large:"

Proverbs are strategies for dealing with situations. Insofar as situations are typical and recurrent in a given social structure, people develop names for them and strategies for handling them. Another name for strategies might be attitudes. (Burke 944)

If, in his view, works of art are strategic naming of situations, sociological criticism should aim at codifying the various strategies which artists have developed with relation to the naming of situations. Proposing a method of classification based on social strategies, Burke contends that the unique merit of this system is that it can cut across previously established disciplines. His sociological criticism, making a liberal use of Marxism and anthropological studies of myth and ritual, is concerned with art as a social act as well as with aesthetic questions.

Drawing our attention to random specimens in the Oxford Dictionary of English Proverbs, Burke demonstrates that there is neither "pure literature" nor "realism for its own sake" in proverbs:

Everything is medicine; Proverbs are designed for consolation or vengeance, for admonition or exhortation, for foretelling. Or they name typical, recurrent situations.

There is realism for promise, admonition, solace, vengeance, foretelling, instruction, charting, all for the direct bearing that such acts have upon matters of welfare (Burke 943-944), He illustrates the various categories with a few representative examples:

Proverbs designed for consolation:

"The sun does not shine on both sides of the hedge at once." "Think of ease, but work on." "Little troubles the eye, but far less the soul."

"The worst luck now, the better another time".

"He that hath lands hath quarrels." "He knows how to carry the dead cock home." "He is not poor that hath little, but he that desireth much."

For vengeance:

"At length the fox is brought to the furrier." "Shod in the cradle, barefoot in the stubble." "Sue a beggar and get a house." "The higher the ape goes, the more he shows his tail." "The moon does not need the barking of dogs." "He measures another's corn by his own bushel." "He shuns the man who knows his well." "Fools tie knots and wise men loosen them."

Proverbs that have to do with foretelling:

"Sow peas and beans in the wane of the moon, who soweth them sooner, he soweth too soon." "When the wind's in the north, the skillful fisher goes not forth." "When the sloe tree is as white as a sheet, sow your barley whether it be dry or wet." "When the sun sets bright and clear, an easterly wind you need not fear. When the sun sets in a bank, a westerly wind we shall not want."

"When the moon's in the full, then wit's in the want." "Straws show which way the wind blows." "When the fish is cast, the net is laid aside." "Remove an old tree and it will wither to death." "The wolf may lose his teeth, but never his nature." "He that bites on every weed must needs light on poison."

Whether the pitcher strikes the stone, or the stone strikes the pitcher, it is bad for the pitcher." "Eagles catch no flies." "The more laws, the more offenders."

"First thrive and then wive." "Think with the wise, but talk with the vulgar." "When the fox preacheth, then beware your geese." "Venture a small fish to catch a great one." "Respect a man, he will do the more."

## Typical, recurrent situations:

"Sweet appears sour when we pay"

"The treason is loved but the traitor is hated." "The wine in the bottle does not quench thirst." "The sun is never the worse for shining on a dunghill." "The lion kicked by an ass." "The lion's share." "To catch one napping." "To smell rat." "To cool one's heels." (Burke 943-944)

Such an analysis of proverbs leads Burke on to the conclusion

that literature may be treated from the standpoint of situations and strategies and that works of art may be approached as strategies for selecting enemies and allies, for socializing losses, for warding off evil eye, for purification, propitiation and desanctification, consolation and vengeance, admonition and exhortation, implicit commands or instructions of one sort or another and that literary forms like "tragedy" or "comedy" or "satire" may be viewed as equipments for living (Burke 947).

The Tamils, one of the most ancient communities of the world, can justly be proud of a repertory of proverbs which touch upon all aspects of human life. There is no life experience which they do not speak of. Every group of men and women from the most foolish to the wisest can when they are in a tight corner or on the horns of a dilemma. The benefit by them as one proverb or the other will come to their rescue whole spectrum of human thought on subjects ranging from sensuous pleasures to spirituality, from the basic needs like food, dress, shelter and sleep to the most advanced philosophical notions is covered by them in a style and manner that will appeal to the elite as well as to the mob. The rich experience of the Tamil community and its culture

are gloriously reflected in them. They also fruitfully lend themselves to the classification advocated by Kenneth Bruke.

Proverbs designed for consolation:

yanaikku oru kalam vantal punaikku oru kālam varum

cat.

If there is a time for the elephant, there will be a time for the muppatu varutam väntavanum illai, muppatu varutam täntavanum illai. None has enjoyed prosperity for thirty years: none has suffered from poverty for thirty years. tikkarravarkkut teyvame tunai God is the only refuge to those that have no human help. elivärai valiyar atittal valiyarait teyvam atikkum If the mighty ill-treat the weak, God will punish the mighty. For Vengeance

murpakal ceyyin pirpakal vilaiyum If you do wrong in the morning, you will reap the consequences

in the evening. tinai vitaittavan tiṇai aruppan: viṇai vitaittavan viṇai aruppan The one that sows millet will reap millet. The one that does wicked deeds will meet with bad ends. aracan anru kollum, teyvam ninru kollum The king's punishment is instant: the god's punishment takes time.

## Proverbs that have to do with foretelling:

kärrullapoté turrikko!

When the wind is favourable, do the winnowing.

ulukinra kalattil úrvaliponal aruvataikkalattil ál téta venta If you have labourers on your side during the days of ploughing, you need not go in search of men during the days of harvesting. karaippar karaittal kallum karaiyum If the capable ones try, even stones will melt. Erumpu úrak kal téyum

A stone will get eroded even if ants keep moving on it. Typical recurrent situations: nilalin arumai veyilil teriyum The rare benefit of the shade will be realized in the heat. mullai mullal etu

Remove a thorn by another.

erivatai iluttal kotippattu atankum If you withdraw what burns, you can control what boils.

pampin käl pampu ariyum The snake alone knows the snake's feet. nunalum tan vayal ketum

The frog will come to grief by its own croaking. näy välai nimirtta mutiyātu The dog's tail cannot be straightened. kollan teruvil üci virpărillai None will sell needles in a blacksmith's street. puvōtu när cerntärpola

Just as the thread that has joined the flowers.

koli mitittukkuñcu muṭam ākātu

The young one does not become lame when the mother-hen steps on it. In all these proverbs, it will be glaringly evident that there is stark realism not for the sake of realism but to encourage, console, reprimand, chastise and teach.

Burke rightly observes that his approach suggests a necessary

modification to the common criticism that there are contrary proverbs.

The apparent contradictions depend upon differences in attitude, involving a correspondingly different choice of strategy. Consider, for instance, the apparently opposite pair.

"Repentance comes too late" and "Never too late to mend". The first is admonitory. It says in effect: You'd better look out or you'll get yourself too far into this business." The second is consolatory, saying in effect "Buck up, old man, you can still pull out of this." (Burke 944)

Burke's explanation is valid in the case of our proverbs too. The following are the apparently opposite pairs that will immediately come to mind. avananri oranuvum acaiyātu Not even a single atom will move without His decision. tan kaiye tanakkutavi Your hand is your only help. ellam talai viti

Everything depends on fate. vitiyai matiyal vellaläm With one's mind one can conquer fate.

It is to be noted that Burke's insight marvelously accounts for the seeming contradictions in Tirukkural, the best of didactic works.

1. Is there anything mightier than fate? Even if one thinks of overcoming it by some strategy, it will prevail.(380) Those who strive hard without yielding to despair will overthrow even fate. (620)

2. Excepting in ways ordained by the Ordainer, even to those who have gathered crores, enjoying them is hard to achieve (377).

Though an attempt may fail because of divine decree, perseverance will pay the wages for the hard work done (619).

3. When a time comes for foes to feign friendship, show friendship in the face removing it from the heart and then abandon it altogether (830). Let not a man be false to his heart: if he does it, his heart itself

will later burn him In all these three pairs of couplets and in a few more, the overt traditions depend upon differences in situations.

When Burke claims that proverbs as literature in miniature have medicinal value, we are reminded of the wisdom of our ancestors who gave their didactic writings names of medicines like Tirikatukam, Cirupañcamulam and Elāti. However, he warns the readers against taking seriously naturalistic writings which pursuing realism as an end in itself give a photographic description of the seamy side of life. One should also be wary of what Burke calls "inspirational works"

We usually take it for granted that people who consume our current output of books on "How to Buy Friends and Bamboozle Oneself and other People" read them and will attempt applying the recipes given. Nothing of the sort. The reading of a book on the attaining of success is in itself the symbolic attaining of that success. The lure of the book resides in the fact that the reader, while reading it, is then

living in the aura of success. What he wants is easy success:

and he gets it in symbolic form by the mere reading itself....

As a way of sizing things up, the naturalistic tradition tends to become as inaccurate as the "inspirational" strategy, though at the opposite extreme. (Burke 945)

The age-old Tamil community giving more importance to serious didactic works than any other in India or abroad seems to have been fully aware of the value of proverbs as equipment for living. Proverbs were given their due place and recognition as early as Tolkäppiyam, which defines the name and nature of a proverb while discussing various literary forms:

Subtlety, sharpness, brevity, brilliance and good sense should characterize proverbs which, in a simple style, should logically treat the subject taken. (Tolkāppiyam 1443)

It is evident that Tolkappiyar perceives in a proverb almost all the qualities of a literary piece though in prose.

The great Samgam poets, known for their complex, subtle and densely textured compositions, did not fight shy of incorporating apt proverbs into their masterpieces:

amma vāli töli immai

nanru cey marunkil titu il ennum

tonru patu moli inru poyttanru kol

Long live, my friend! Does the old saying, "if you do good now, you will face no harm later, go wrong today?

This Akam poem quoting a proverb to prove its point adds that old sayings continue to be valid and relevant even long after they came into being.

It is remarkable that a poet of considerable antiquity like Munrurai Aratyanar conceived a collection of four hundred poems, each weaving into its text a proverb witnessing to the wisdom of the ancients. Some of these proverbs serve as explanations of the point enuniciated, some as illustrative examples and some more provide functional similes. Whatever may be the kind of the proverb, it becomes an integral part of the poem and reveals its meaning in a flash. Contradicting proverbs do make their appearance but with proper explanations. One poem (Palamoli 204) contends that evem a man known for his intellectual attainments may commi mistakes since destiny may destroy intellect. In another poer (Palamoli 220), the one that does not venture to do great deed because of fear of fate is condemned as a fool. The two proverb arivinai úûlé átum and "arivaccam arrapperitu" are presente here in such an interpretative way that the contradiction is

ironed out. One piece (palamoli 127) argues that when fate is favourable no efforts are required to make money whereas all efforts will be in vain when it is unpropitious. Another piece (Palamoli 161) exhorts men not to get frustrated deciding that they have none to help them but to undespairingly work hard since rewards are certain to reach them.

While going through these poems, one is struck by the revelation that the formidable Valluvar might have been indebted to some of these proverbs for his couplets in the chapter called "Fate." Munrurai Araiyanar's Palamoli nānūru came much later than Tirukkural but these proverbs could have been in currency during Valluvar's time. The latter has struck gold out of these and a close study of his couplets vis-a-vis the corresponding proverbs will be a lession in poetry-making. The following kurals, for instance, are poetic renderings of the ideas mentioned in the proverbs on destiny:

Determination will be born of fortune-making destiny. Indolence will be born of adverse destiny (kural 371).

Malignant fate will stupefy one's intelligence: benignant fate will enrich one's intelligence (kural 372).

Even if one learns many abstruse works, one's innate

intelligence will only prevail (kural 373).

Because of the reign of destiny, all factors favourable to acquiring of wealth may turn unfavourable and all factors unfavourable may turn favourable (kural 375).

What is not one's pre-ordained property will not stay even if well-guarded. What is one's own will not leave even if thrown out (kural 376).

Valluvar's observations on fate culled out from proverbs and converted into great poetry culminate in a message characteristic of his vision of life. Why should those that enjoy

the pleasures of life when fate is favourable feel miserable when things go awry?

244 (kural 379).

Not only Valluvar but later Tamil poets also realized the potential poetic value of proverbs and capitalized on that. There was a proverb which, based on a typical recurrent situation, stated that none would welcome death calling it from behind: kurram kommai kottinäril. Munrurai Araiyanar used it to warn people against inviting trouble by incurring the wrath of great men. It is prudent to learn a lesson from the life of the mighty giant, who, not knowing this, died in a battle. (Palamoli 291)

**கொள்ளற்க போற்றாது கொண்டரக்கன் போரில் அகப்பட்டான் நோற்ற பெருமை உடையாரும் கூற்றம் புறங்கொம்மை கொட்டினாரில்.** Tiruttakka tēvar, well- versed in the art of making his own what he borrowed from his Tamil ancestors, especially Sangam poets, did not eschew proverbs. Adding a new dimension to the proverb and placing it in the proper context, he is able to evoke the feelings of pathos and anger. When the hero of Civaka Cintamani is imprisoned, the heart-broken women give vent to their sorrow and indignation by invoking the god of death in a picturesque description modeled on the proverb: norrilär makalirenpar nonkantir tolkalenpär

kúrrattaik kommai koṭṭik kulattotu muṭiyumenpār

(Civaka cintamani 1109-)

The author of Palamoli Naṇūru, tapping all available resources resorts to proverbs even when he requires similes that can serve the twin aims of illustration and ornamentation. The proverb aniyelām ataiyinpin (Dress has to be privileged over all ornaments) is employec to drive home the point that knowledge has to take precedence ove all kinds of wealth in Palamoli 26.

**அறிவினால் மாட்சியொன்று இல்லா ஒருவன் பிறிதினால் மாண்டது வெனாம் – பொறியின்**

**மணிபொன்னும் சாந்தமும் மாலையும் இன்ன அணியெல்லாம் ஆடையின் பின்.**

Since there is "God's plenty" the poet can bring in even two proverbs as similes in some poems. The proverb curam põkki ulku kontär means that when a man has crossed the path, it is difficult to collect toll from him: marampokkik küli kontär illai means that when a man has reached the shore by boat, it is not easy to collect from him the wages due to the boatman. These two old proverbs come handy to Araiyanar to tell people that if one does not study during youth, one cannot hope to do ut during old age (Palamoli 60).

**ஆற்றும் இளமைக்கண் கற்கலான் மூப்பின்கண்**

**போற்றும் எனவும் புணருமோ–ஆற்றச் சுரம்போக்கி உல்கு கொண்டார் இல்லையே இல்லை மரம்போக்கிக் கூலி கொண்டார்.**

Great poets like Kalidasa have compared the king's collecting taxes from citizens to the bees' sucking honey from flowers as in both cases what is got without inflicting any pain is used ultimately to benefit the source. To one's utter surprise, one learns that this is a proverb that might have been in vogue several centuries ago: **பொருத்தம் அழியாத பூந்தண்டார் மன்னர் அருத்தம் அடி நிழலாரை – வருத்தாது கொண்டாரும் போலாதே கோடல் அதுவன்றோ வண்டு தாதுண்டு விடல்.**

(244)

Folk knowledge and culture as enshrined in proverbs can very often put to shame not only poets and scholars but philosophers and scientists too. One that hears a drum beating feels that it echoes the words one has in mind. There is a rare proverb which expresses this idea. 'trttatu icaikkum parai' Araiyanar observes that this is similar to the fact that even very learned men will not be able to free a foolish man's mind from the wrong notions that he cherishes. The drum echoing the words one thinks of is a classic example of Freud's projection theory which might not have occurred to the great psychologist himself.

**நீர்த்தன்று ஒருவர் நெறியன்றிக் கொண்டக்கால் பேர்த்துத் தெருட்டல் பெரியார்க்கும் ஆகாதே.**

Manikkavācakar found in folklore a valuable resource which they could tap with remarkable success. In the fourth book of the saivite canon, Appar has a decade of stanzas called Palamolippatikam which uses ten proverbs as similes of an everlasting appeal. In all these, he regrets his early adherence to Jainism in preference to Saivism.

He uses "kaniyiruppak kay kavartal" to stress the point that his becoming a Jain in the hope of getting release from the bondage of life was like stealing unripe fruits while ripe ones were freely available.

When it was easy to follow the path of Saivism, he chose the difficult road of Jainism which would not take him anywhere. And that was similar to (muyal viṭṭuk kākkaippin potal), leaving the rabbit and going behind the crow.

When Lord Siva was ready to offer him shelter, he foolishly sought the feet of Arukan, the Jain god without realizing that it was (aramirukka maram vilaikkukkollal), paying a heavy price for evil while virtue is available free of charge.

His expectation that Jainism would redeem him was as stupid as (pani niral pavai cey appävittal), the attempt to make a doll out of snowflakes.

He wandered in the company of wicked people without willingly providing a place for the Lord in his body. It was a case of (etan pōrkku atan akappaṭal), Atan getting caught in the war of Etan.

Besides studying the false scriptures, he never meditated on the true god. That reminds him of (iruttaraiyil malatu karattal), milking a barren cow in a dark room.

As he was once leading a shameful life, he became an object of ridicule. He now understands that it was (vilakkirukka minminitikkäytal), seeking warmth from luminous beetles, when there is a lamp with which a fire can be readily lit.

The deceitful life of a Jain monk, who is unable to identify the real source of salvation is (pälüril payikkam pukal), begging in a wasteland.

When one doesn't approach the lord who destroys evil, what one does is (tavamirukka avam ceytal), doing the opposite of penance, when undertaking penance is feasible.

Forgetting the Lord that saved the other gods by drinking poison is as idiotic as (karumpirukka irumpu katittal), biting iron when sugarcane is within one's reach.

But for Munrurai Araiyanar and Appar some of these proverbs would have been lost forever. Their poems constitute a unique literary phenomenon celebrating folk wisdom.

References:

1. Burke, Kenneth. 1971, "Literature as Equipment for Living". Critical Theory Since Plato ed. Hazard Adams, New York: IIBJ, 943-47.

2. Civaka Cintamani 1969. Urai,U.V.Caminathier, Thanjavur Tamil University.

3. Palamoli Nānūru 1989. Ed. Puliyurkkecikan,Chennai: Mulla Nilaiyam.

4. The Sacred Kurral Tr.G.U.Pope, New Delhi: Asian Educationa Services, First Published: 1886, AES Reprint: 1980. 5. Tēvāram Nālām Tirumarai, 1957, Tarumapuram Tarumapura ātiṇam.

நன்றி: The Glory that was Tamil Culture

திறனறிந்து சொல்லுக சொல்லை அறனும்
பொருளும் அதனினூஉங் கில்.

திருக்குறள் 644

# மேலை மொழியில் விரிந்த தமிழ் "அம்"

திரு. இரா. திருமாவளவன்
தேசியத் தலைவர்,
மலேசியத் தமிழ்நெறிக்கழகம், மலேசியா



தமிழில் அம் எனுஞ் சொல் நீரையுங் குறிக்கும்.

உ > உல் > அல் > அம்
உல்= கூடல் , சேர்தல் பொருளில் வரும் கருத்து வேர்.

நீர் ஐம்பூதத்துள்ளும் இயைந்து கலக்கும், சேரும் தன்மையதால் சேர்தல் பொருளில் அம் என்றாயிற்று . கூடுவது பெரிதாகுமாகையால் பெருமைப் பின்னொட்டாகவும் "அம்" அமைந்தது. நீர்போல் இயைந்தது குளிர்மை, மென்மையாதலால் அழகும் ஆயிற்று .

நீர், பெருமை, அழகு முதலான பொருளை "அம்" தரும்.

"அம்" வழியே அம்பம் எனுஞ் சொல் நீரைக் குறித்தது.

அம் > அம்பி = நீரில் ( பெருங்கடலில்) செல்லும் பெருங்கலம், தெப்பம்
"பெருவலை இடிக் குரற் புணரிப் பௌவத்து
இடுமார் நிறையப் பெய்த அம்பி"
( நற் : 74:2:3)

அம் > அம்பு= தண்ணீர்
"அம்பு உலாவு மீனும் ஆகி ஆமை ஆகி"
( திருமழிசை சந்த விருத்தம்: 35)

அம் > அம்பு > அம்பம் = நீர்
அம் >அம்பு >அம்பணம் = நீர், நீர் விழுங்குழாய்

"காதல் செய்பவர் தீர்த்திடு உகு அம்பமே"
( திருக்கடைக் காப்பு : 3:114:11)

அம் >அம்பு > அம்பரம்= கடல், ஆழி
ஆழி பெரு நீர் அம்பரம் முந்நீர் கடல் எனக் கருதுவர் ( திவாகரம் 5:41)

அம் > அம்புதம் = நீரால் ஆன முகில் .
அம்புதம் நால்களால் நீடுங் கூடல்
( சம்பந்தர் தேவாரம் : 1:7:5)

அம்புதி = கடல்
"பணி எனக்கு அம்புதியே"
( அட்டப் பிரபந்தம் 6:10)

அப்பு = நீர்
அம் > அம்பு > அப்பு

அம்முதல்= பொருந்துதல், கலத்தல்

அப்பு > அப் ( சமற்கிருதம்)

Ap = water > ( A SANSKRIT ENGLISH DICTIONARY > page 47 )

தமிழின் சேர்தல் கூடுதல் கருத்து வளர்ச்சிப் பொருளைத்தரும் "அம்" சமற்கிருதத்திற்கும் மேலை ஐரோப்பிய மொழிகட்கும் வேராகும் என்பதைக் காய்தல் உவத்தல் இன்றிப் பார்ப்பாரே உணர்வார். பார்ப்பாரியக் கருத்தாளர் பாரார் ;

அஃகு தமிழில்கூர்த்துச் சுருங்கும் பொருளைத் தரும்.

அஃகு = கூர்மை
Ac , to be sharp, to pierce
L. accus = needle, ac–uere, to sharpen
E. accute, sharp, pointed

உல்>அல் > அஃகு ஒடுங்கிச் சிறுத்து ஒழுகும் நீரூற்றைக் குறிக்கும். தமிழின் அஃகு மேலை மொழியில் Aqua எனப் பரவியது.

அஃகு = ஊறு நீர்
அஃகம் = ஊறல், நீரூற்று
அஃகுதல் = நீரூறுதல்

Ap (áp–) is the Vedic Sanskrit term for "water", which in Classical Sanskrit only occurs in the plural āpas (sometimes re–analysed as a thematic singular, āpa–), whence Hindi āp. The term is from PIE hxap "water".[note 1] The Indo–Iranian word also survives as the Persian word for water, āb, e.g. in Punjab (from panj–āb "five waters"). In archaic ablauting contractions, the laryngeal of the PIE root remains visible in Vedic Sanskrit, e.g. pratīāpa– "against the current", from *proti–hxp–o–. In Tamil, Ap means water, and has references in poetry.

Root / lemma: ab-
English meaning: water, river
German meaning: `Wasser, Fluß'
Note:
From Root / lemma: akʷā- (more properly əkʷā): ēkʷ- : `water, river' [through the shift -gʷ- > -b-, -kʷ- > -p- attested in Greek, Illyrian and Celtic languages] derived Root / lemma: ab- : (water, river) and Root / lemma: ăp-2 : `water, river'.
Material: Lat. amnis f., late m. c (*abnis); air. ab (*aba) Gen. abae `river', besides abann, cymr. afon, orn. bret. auon, gall. brit. FIN Abona, derived cymr. afanc `beaver, water demon, dwarf', to mir. abac (*abankos) `beaver, dwarf', schweiz.-frz. avañ `pasture' (*abanko-); lett. FIN Abava.
The West German FIN in -apa, nhd.-affa, probably go back partly to usually lost westgerm. *ap-(idg. *ab-), partly in ven.-ill. ap- (idg. *ap-).
rum. apă `water'
References: WP. I 46 f., WH. I 40, Feist 19a, 579a, GIPatSR. II 134.
See also: compare also āp-2 `water, river' and abō(n) `ape'.
Page(s): 1

மேலை மொழிகட்கும் வேரையும் வேர்ப்பொருள் தரும் கருத்து வளர்ச்சியையும் தமிழில்தான் காண முடியும்... இத்தகு வேர் விளக்கம் இன்னும் இன்னும் விரியும் பின்னும் பின்னும் வரும்...ஒப்பாரைப் பற்றி நமக்குக் கவலையில்லை.. ஒரு நாள் வரும் இந்த உலகம் இதனை உணரும்...

# தமிழ் எழுத்துகளின் வரிவடிவப் பிழைகளும் திருத்தங்களும் !

முனைவர் மு. கனகலட்சுமி
தமிழ் ஆசிரியர் (ம) ஆராய்ச்சியாளர்
சென்னை பெண்கள் மேல்நிலைப் பள்ளி,
செனாய் நகர், சென்னை



2014 முதல் 2018 ஆம் ஆண்டு வரை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் தமிழ் வாசிப்புத்திறனில் ஏற்படும் சிக்கல்களும் தீர்வுகளும் எனும் தலைப்பில் முனைவர் பட்டம் பெற்றேன்.

இவ்வாராய்ச்சியின் போது தற்போதைய தமிழ் எழுத்துகளின் வரிவடிவத்தில் இருக்கும் பிழைகளைக் கண்டறிந்தேன். 2001 – 2002 ஆம் கல்வி ஆண்டில் கல்வித்துறையின் மூலம் வெளியிடப்பட்ட "மொழிப் பயிற்சி கையேடு" எனும் கையேட்டில் வரிவடிவத்திற்கான சரியான பெயர்கள் எழுதப்பட்டிருந்தது. எனது ஆய்வின் அடிப்படைக் கருவே இந்நூலாகும்.

தமிழ் வளர்ச்சித்துறை இயக்குநர் முனைவர் பட்ட வழிகாட்டி ஐயா கோ.விசயராகவன், இந்திய மொழிகளின் நடுவண் நிறுவனத்தில் கணினித்துறைத் தலைவர் இராமமூர்த்தி ஐயா, பேராசிரியர் நடராசபிள்ளை ஐயா, பேரா.பாலகுமாரன் ஐயா, அண்ணாமலைப் பல்கலைக்கழகப் பேராசிரியர் செ.வை.சண்முகம் ஐயா, பச்சையப்பன் கல்லூரிப் பேரா.ஆண்டவர் ஐயா, பேரா. வெற்றிமாறன் ஐயா, தூத்துக்குடி மாவட்டம், கோவில்பட்டி ஊராட்சி, நடுநிலைப் பள்ளித் தலைமையாசிரியர் வில்சன்பர்னபாஸ் போன்ற சான்றோர்களிடம் சரியான வரிவடிவத்தினைக் கலந்தாய்வு செய்து ஒப்புதல் பெற்ற பின்பே என் ஆய்வேட்டில் இவ்வரிவடிவங்களை இயற்றினேன்.

நன்னூல் உரையாசிரியர் சிவஞான முனிவர் கீழ், மேல் விலங்கு சுழி என மெய்யெழுத்துகளின் விருத்தியுரையில் இவ்வரிவடிப் பெயர்களை அறிமுகப்படுத்தியுள்ளார். தென்னங்கீற்று, பனங்கீற்று ஆகியவற்றில் உள்ள குச்சிகள் கோடு போன்று உள்ளதால் தமிழன் கோட்டிற்கு 'கீற்று எனப் பெயரிட்டான்.

| | | |
|---|---|---|
| — | - | படுக்கைக்கீற்று |
| \|↑ | - | ஏறுகீற்று |
| \|↓ | - | இறங்குக்கீற்று |
| /↙ | - | சாய்வுக்கீற்று |
| U | - | வளைவுக்கீற்று |

## வரி வடிவத்திருத்தம் – 1

ா – இவ்வரிவடிவம் (துணைக்கால் என்றே அனைவராலும் அழைக்கப்படுகிறது) மேற்கண்ட வரிவடிவமானது கால் என்றே அழைக்கப்பட வேண்டும்.

தமிழ் மொழியில் இருக்கக் கூடிய – ெ , ே , ை போன்ற வரிவடிங்களும் துணை எழுத்துகள்தான். ஆனால் இவ்வெழுத்துகளை துணைக்கொம்பு என்றோ, துணை இரட்டைக்கொம்பு என்றோ நாம் அழைப்பதில்லை.

இவ்வாறு இருக்க கால் – ா எனும் வரிவடிவம் மட்டும் எவ்வாறு துணைக்கால் ஆகும்.

ா – இவ்வரிவடிவம் கால் என்றே அழைக்கப்படவேண்டும்.

## வரி வடிவத்திருத்தம் – 2

ே – இவ்வரிவடிவம் பாடப்புத்தகங்களில் இரட்டைக்கொம்பு என்றே ே அழைக்கப்படுகிறது.

இவ்வரிவடிவமானது கொம்பு எனும் வடிவத்துடன் ஒரு சுழி இட்டு முடித்து எனக் கல்வெட்டில் இன்றும் இவ்வரி வடிவத்தினைப் பார்த்துக் கொம்புச்சுழி கொண்டிருக்கிறோம்.




## வரி வடிவத்திருத்தம் – 3

ை – இவ்வரிவடிவத்திற்கு பெயரே கிடையாது. வெளிநாடுகளில் இணைக்கொம்பு என்றும் சங்கிலிக் கொம்பு என்றும் சொல்லப்படுகிறது இணைக்கொம்பு என்பது "ெெ" – இவ்வரிவடிவமாகும்.

ஒரு கொம்போடு மற்றொரு கொம்பை இணைப்பது. உதாரணம். தொடர்வண்டி.

இரும்பு காலம் என்பது கி.மு. 500 முதல் கி.பி. 300 வரை ஆகும். சங்கிலி கொம்பு என்பது தவறான பெயர் என்பது அனைவருக்கும் தெரிந்தது.

ஒரு கொம்புடன் மற்றொரு கொம்பை சேர்த்து எழுதத் தோன்றுவது இரட்டைக் கொம்பு ஆகும் உதாரணம் – இரட்டைகண்ணி – பூக்கட்டுதல்.

## வரி வடிவத்திருத்தம் – 4

ஊ, ஔ போன்ற எழுத்துகளின் துணையாக நிற்கும் ள இவ்வரிவடிவம் *ள" எனும் எழுத்தையே தாங்கி நிற்கிறது.

நம் மொழியில் "ஓர் எழுத்து ஓர் உச்சரிப்பு" எனும் அடிப்படைக்கருத்தைக் கொண்டது. இவ்வாறிருக்க உள்ளம், ஔவையார், ஊஞ்சல் போன்ற எழுத்துகளில் 3 நிலையில் "ள" என உச்சரித்தே கற்றுக் கொடுக்கப்படுகிறது. இது மிகவும் தவறு எனப் புரிந்ததே.

ஒரு கொம்பும், ஒரு காலும் சேர்ந்து கொம்புகால் ௭ என உச்சரிக்கவும், எழுதவும் வேண்டும். அச்சில் கொம்புகால் வரிவடிவம் "ள" வாக மாறியது. பாடப்புத்தகங்களில் ௭ கொம்புக்கால் வரிவடிவம் இடம் பெறவேண்டும். இதுவே சரியானது.

# தமிழ்மொழி கற்பித்தலுக்கு வளமையான தொழில்நுட்பங்களைப் பயன்படுத்தல்



முனைவர் **வே. அருட்பாமணி**
உதவிப் பேராசிரியை, தமிழ்த்துறை,
இந்தோ – அமெரிக்கன் கல்லூரி, செய்யாறு.

கல்வியில் தொழில்நுட்பங்களைப் பயன்படுத்துதல் என்பது இன்றைய நாளில் தேவையான ஒன்று. மடிக்கணினி, திறன்பேசி, தொலைக்காட்சி, வானொலி, திரையரங்கம், செய்தித்தாள் என எண்ணற்ற தகவல் தொடர்பு கருவிகள் நாளும் நாளும் வந்துகொண்டே இருக்கின்றன. இவற்றைத் தவிர்த்து வாழ்தல் என்பது இயலாத ஒன்றாகும். இந்நிலையில், தொழில்நுட்பங்களைக் கையாண்டு பாடத்திட்டங்களைக் கற்பதற்கும், திறன்களை வளர்த்துக்கொள்ளவும், உலகலாவிய அறிவைப் பெறுவதற்கும் மாணவர்களை அவற்றை முறையாகப் பயன்படுத்த கற்றுத்தரல் இன்றியமையாததாகிறது. ஒரு செய்தியை வேண்டி தேடும்போது வேண்டாத தகவல்களையும் பார்க்க நேரும். அவ்விதம் காணும்போது அவற்றைத் தாண்டி, தான் பெற வேண்டிய தகவல்களைப் பெறும் தனிமனித ஒழுக்கத்தை ஆசிரியர் மாணவர்களுக்கு ஏற்படுத்த வேண்டும்.

தீநுண்மி காலத்தில் கைப்பேசியில்தான் கல்வி என்ற நிலை தவிர்க்க முடியாதது ஆனது. குழந்தைகளின், வளர் இளம் வருவத்தினரின் கைகளில் நாள் முழுதும் கைப்பேசி காணும்போது ஒரு பதபதைப்பும் பயமும் பெற்றோருக்கு ஏற்படுவது உண்மையே. பள்ளிகளிலும், இல்லங்களிலும் தொழில்நுட்பங்களைப் பயன்படுத்தும்போது இலக்கை நோக்கி அது பயணிப்பதாக இருக்க வேண்டும். தொழில்நுட்பங்கள் பொழுதுபோக்கு என்ற நிலையில் இருந்து கல்விக்கான கருவியாக மாறும்போது அங்கு ஆர்வமும், மகிழ்ச்சியும் இயல்பை விட அதிகமாக இருக்கும்படி பார்த்துக்கொள்ள வேண்டும். மாணவர்களுக்கான பாடத்தை அலகு வாரியாகப் பிரித்து கடினப் பகுதிகளை காணொலிப் பதிவுகளாகச் செய்து திறன்வகுப்பில் (smart class) வகுப்பில் ஒளிர்விமுனை (LED) வண்ணத்திரையில் காட்டும்போது மாணவர்கள் மகிழ்வோடும், எளிமையாகவும் கன்கின்றனர். மருந்து கசப்புதான். ஆனால், அதை நாம் தேனில் அல்லவா குழைத்துக் கொடுக்கிறோம். நமக்குத் தேவை மருந்து உடலுக்குச் சென்று நோயைத் தீர்க்க வேண்டும். தொழில்நுட்பமும் இவற்றைப் போன்றதே. மாணவர்கள் கற்றலைச் சுமையாகக் கருதாமல் இருக்க செல்பேசிழிக் கற்றல், செய்து கற்றல், விளையாட்டின்வழிக் கற்றல் எனக் கொண்டு வரும்போது மகிழ்வுடன் கற்பர். எழுத்துகளைக் கற்பிக்க "ட், ப், ம்" ஆகிய மூன்று எழுத்துகளுடன் அவற்றின் புள்ளி எழுத்துகளையும் சேர்த்து எளிய பாடமாகப் படம், மடம், பட்டம், மட்டம் என எழுத்துகளைக் கூட்டிப் பழக்கி, சொற்களை உருவாக்கும் திறனை வளர்க்கலாம். விளையாட்டாகக் குழந்தைகள் சொற்களைக் கூறிக் கொண்டே செல்வார்கள்.

மாணவர்களை இரு குழுக்களாகப் பிரித்து மரம் என்ற சொல் உள்ள புகைப்படத்தை எடுக்கும் மாணவன் அருகில் மரம் என்ற எழுத்துகள் உள்ள மூன்று மாணவர்களும் அருகில் நிற்க வேண்டும் என்று கூறுதல். இவ்விதம் கற்கும்போது எழுத்துகள் பசுமரத்தாணி போல் மனதில் பதிவும். மேலும் ஒவ்வொரு மாணவருக்கும் ஒரு படத்தைக் கொடுக்க வேண்டும். பின் படத்தைக் காட்டி அதன் பெயரைக் கரும்பலகையில் எழுதச் செய்தல் வேண்டும். இவை போன்ற ஏராளமான பயிற்சிகள் இன்று காலத்திற்கு ஏற்ப கைப்பேசி செயலியில் உள்ளன. அவற்றை ஆர்வமுடன் பயன்படுத்தி எளிமையாகத் தமிழைக் கற்கலாம்.

மொழிப்பாடம் மட்டுமல்லாது கணிதம், அறிவியல், வரலாறு, புவியியல் என அனைத்துப் பாடங்களையும் அதற்கான செயலிகள் வழியாக எளிதாகக் கற்பிக்கலாம்.

சொல்லினம் செயலி (https://goo.g1/8g13zj4)
மாயக்கட்டம் செயலி (https://goo.g1/vHkkQt)
தமிழ் கற்போம் செயலி (https://goo.g1/Fk5Hvb)
யோசி செயலி (https://goo.g1/Hb8MN3)

போன்ற செயலிகள் மாணவர்களுக்குக் கற்றலில் உள்ள இடர்ப்பாடுகளை நீக்கி எளிமையாகக் கற்க வகை செய்கின்றன. நாம் நடத்தும் வரலாற்று நிகழ்வுகளைக் கதை சொல்லி செயலி மூலம் மாணவர்களைக் கேட்கச் செய்யலாம். ஆசிரியரே கூறிக் கொண்டிருந்தால் அலுப்புத் தோன்றும். மாணவர்களையும் குழுக்களாகப் பிரித்து பதிவு செய்த ஒலிநாடாக்கள் மூலம் சிறு சிறு இசையெழுப்பி வகுப்பறையை வரலாற்றுப் பெட்டகமாக்கலாம்.

Google store-இல் சென்றால் Maths application, Science application என்ற ஆயிரம் ஆயிரம் எளிய வழிகள் கற்றலுக்கு.

Kids Maths

2 + 4 = ?

கீழே மூன்று விடைகள் இருக்கும். தொடுதிரையைத் தொட்டவுடன் அதற்கான சரியான விடைகள். மீண்டும் மீண்டும் பயிற்சி செய்யக்கூடிய முறை அமைப்பு என இன்றைய தொழில்நுட்பங்கள் கற்றல் கற்பித்தலுக்கு பரந்து விரிந்துள்ளன. இணைவழிக் கல்வி கற்க உதவும் இணையதளங்கள் Elearning websites என்று ஏராளம் உள்ளன. இணையத்தில் செய்திகள் விரைவாகவும் துல்லியமாகவும் கிடைக்கின்றன. கற்போருக்குச் செய்திகள் உடனடியாகக் கிடைக்கின்றன. பாடப்பொருள் வடிவிலும், வரைபட வடிவிலும், உயிரோட்டச் செயலிகள் (Animated forms) வடிவிலும் கொடுக்கும்போது இணைய வழிக் கற்றல் இணையில்லாக் கற்றலாகிறது. எல்லாப் பாடங்களுக்கும் மின்காட்சித்திரை Power point slide மூலம் கருத்துகளை சுருக்கி விரித்துரைக்கலாம். சமூக அறிவியலில் Google Earth என்ற இணையதளத்தின் மூலம் நாம் எங்கே இருக்கிறோம். நம்மைச் சுற்றி நிகழ்வது என்ன! என்ற தகவல்களை உயிரோட்டமாக நாம் அறியலாம். இணையவழிக் கற்பித்தலில் பாடப் பொருளுக்கான குறுந்தகடை அணியம் செய்து கணினி மூலமாகவோ அல்லது ஒளிர்விமுனை திரையிடு பொறி (LED Projector) மூலமாகவோ கற்பிக்கும்போது அது வெறும் இயந்திரவழிக் கற்றலாக மட்டுமே இல்லாமல் மாணவர்களின் ஐயங்களை ஆசிரியர் உடனுக்குடன் தீர்க்கவும் வகை செய்கிறது.

கற்பித்தலில் தொழில்நுட்பங்களைப் பயன்படுத்தும்போது மாணவர்கள் மனனம் செய்து படிக்காமல் புரிந்துகொண்டு படிப்பார்கள். கற்றல் திறன் மேம்படும். எந்தத் தொழில்நுட்பமாக இருந்தாலும் அது கற்பிக்கும் ஆசிரியரின் திறனாலே கூடுதல் கவனம் பெறுகிறது, சிறப்பும் பெறுகிறது. ஆசிரியர்களுக்கு இணையாக இவற்றை நாம் கூற முடியாது. ஆசிரியர் இவற்றைப் பயன்படுத்தி மாணவர்களின் திறன்களை வளர்ச்சிபெறச் செய்யலாம். பத்து ஆண்டுகளுக்கு முன்பு வீட்டை விட்டுப் பிள்ளை வெளியே சென்றாலே கூடா ஒழுக்கத்தால் அவன் வாழ்வு தடம் மாறும் என அஞ்சிய பெற்றோருக்கு இன்று தொழில்நுட்ப வளர்ச்சியால் உலகமே வீட்டுக்குள் என்ற நிலை உள்ளது. இத்தகைய சூழலில் பிள்ளைகளுக்குக் கவனச் சிதைவு ஏற்படாவண்ணம் தொழில்நுட்பங்களைப் பயன்படுத்த ஆசிரியர் வழிகாட்டியாக நிற்றல் வேண்டும்.

# அகரமுதலி இயக்ககத்தில் நுண் பயிலரங்கக் கூட்டம்







இளையதலைமுறை மாணவர்களிடம் கலைச்சொல்லாக்கச் சிந்தனையை ஊக்குவிக்கும் வகையில், தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககமும், பன்னாட்டுப் பயன்முறைத் தமிழ்க் குழுவும் இணைந்து நடத்திய தமிழ் நுண் பயிலரங்கத்தின் 175 ஆவது அமர்வு மெய் – மெய்நிகர் பயிற்சிப் பட்டறை (Hybrid Workshop) என்ற வகையில் அகரமுதலி இயக்ககத்தில் 25.07.2023ஆம் நாள் சிறப்புநடைபெற்றது. இதில், பட்டாபிராம், தருமமூர்த்தி இராவப் பகதூர் கலவல கண்ணன் செட்டி இந்துக் கல்லூரித் தமிழ்த்துறை மாணவ – மாணவிகள் கலந்துகொண்டனர்.

பயிலரங்கில் அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் தலைமை வகித்தார். கணினி கலைச்சொல் களஞ்சிய அகராதி, அறிவியல் கலைச்சொல் களஞ்சியம், அறிவியல் தொழில்நுட்ப கலைச்சொல் களஞ்சிய அகராதி உள்ளிட்ட நூல்களை இயற்றிய நாடறிந்த தமிழறிஞரான மணவை முஸ்தபா அவர்களின் மகனான பேரா. மரு. மு. செம்மல் அவர்கள் கலந்துகொண்டு சிறப்புரையாற்றினார்.

அப்போது, தமிழ் நுண் பயிலரங்கமானது மெய் – மெய்நிகர் பயிற்சிப் பட்டறையாக (Hybrid Workshop) நடைபெறுவதால், இதில் நேரில் கலந்து கொண்டும், புலனத்தின்வழி கூகுள் படிவத்தைப் பகிர்ந்து அதனை நிரப்பச் செய்து 120 நாடுகளிலுள்ள தமிழார்வலர்களிடமும் கலைச்சொல்லாக்க வல்லுநர்களிடமும் தமிழ்க் கலைச்சொல்லாக்கங்களைப் பெறமுடியும். இதுபோன்ற நுண் பயிலரங்குகள் தனித்துவமான கட்டமைப்புடன் மாணவர்களிடையே கலைச்சொல்லாக்க அறிவுசார் திறனையும் ஆர்வத்தையும் வளர்க்க உதவும் என்றும், இதனால்

குறுகிய நேரத்தில், குறைந்த பொருட்செலவில், மிக அதிகமான ஆளுமைகளிடமிருந்து நிறைய – செறிவான தமிழ்க் கலைச்சொற்களைப் பெற முடியும் என்றும் தெரிவித்தார்.

அதேபோல், 08.08.2023ஆம் நாள், அகரமுதலி இயக்ககத்தில் கலைச்சொல்லாக்கப் பயிற்சி நுண் பயிலரங்கம் நடைபெற்றது. இந்த 184ஆவது தமிழ் நுண் பயிலரங்கில் ஆவடி, மகாலட்சுமி மகளிர் கல்லூரித் தமிழ்த்துறை மாணவிகள் கலந்கொண்டனர்.









# தமிழ்க் கலைக்கழகத்தின் 137–ஆவது கூட்டம்




21.07.2023 ஆம் நாள், தமிழ்க் கலைக்கழகத்தின் 137–ஆவது கூட்டம் அகரமுதலி இயக்ககத்தில் இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. கூட்டத்தில்,அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன்,முனைவர் கு.பாலசுப்பிரமணியன், திரு.நா.சு.சிதம்பரம் ஆகியோர் பங்கேற்றனர். முனைவர் ஆ. அரிமாப் பாமகன், நூல் மதிப்புரையாளர் கவிஞர் மெய்ஞானி பிரபாகர பாபு மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் கலந்துகொண்டனர்.

# தமிழ்க் கலைக்கழகத்தின் 138–ஆவது கூட்டம்




27.07.2023 ஆம் நாள், தமிழ்க் கலைக்கழகத்தின் 138–ஆவது கூட்டம் அகரமுதலி இயக்ககத்தில் இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. கூட்டத்தில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் கு.பாலசுப்பிரமணியன், திரு. அ. மதிவாணன், திரு.நா.சு.சிதம்பரம் ஆகியோர் பங்கேற்றனர். உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத் தமிழ்மொழி (ம) மொழியியல் புல உதவிப் பேராசிரியர் முனைவர் நா. சுலோசனா, தமிழாசிரியர் முனைவர் மு.கனகலட்சுமி, முனைவர் ஆ அரிமாப் பாமகன்,நூல் மதிப்புரையாளர் கவிஞர் மெய்ஞானி பிரபாகர பாபு மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் கலந்துகொண்டனர். கூட்டத்தில் 203 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

# இயற்கை மொழியாகிய தமிழில் காரணப் பொருளின்றி எந்தச் சொல்லும் இல்லை!

## அகரமுதலி இயக்ககத்தில் நடைபெற்ற அகப்பயிற்சியில் புலவர் வெற்றியழகனார் பெருமிதம்!







செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் அகப்பயிற்சித் திட்டத்தின்கீழ் (Internship programme), பட்டாபிராம், தருமமூர்த்தி இராவ் பகதூர் கலவல கண்ணன் செட்டி இந்துக் கல்லூரித் தமிழ்த்துறை மாணவ – மாணவிகளுக்கான அகப்பயிற்சியின் மூன்றாம் நாளான 27.07.2023 ஆம் நாள் மாணவர்களுக்குத் தமிழ் இலக்கணம், தமிழ் ஒலிப்புமுறைகள் மற்றும் மொழிபெயர்ப்பு குறித்துப் பயிற்சியளிக்கப்பட்டது. சொற்குவை வலைத்தளத்தின் பயன்பாடு, கலைச்சொல்லாக்கத்தின் தேவை, மொழிக்காப்பில் அகராதிகளின் பங்கு, பிறமொழிக் கலப்பின்றித் தமிழ் பேசுதல் உள்ளிட்டவை குறித்த விழிப்புணர்வை இளைய தலைமுறையினரிடம் விதைக்கும் வகையில், அகரமுதலி இயக்ககத்தில் திங்கள்தோறும் கல்லூரி மாணவர்களுக்கு அகப்பயிற்சி வழங்கப்பட்டுவருகிறது.

அந்தவகையில், 24.07.2023 முதல் 28.07.2023 வரை, பட்டாபிராம், தருமமூர்த்தி இராவ் பகதூர் கலவல கண்ணன் செட்டி இந்துக் கல்லூரித் தமிழ்த்துறையில் இரண்டாமாண்டு பயிலும் 21 மாணவ – மாணவிகளுக்குக் அகப்பயிற்சியளிக்கப்பட்டது. பயிற்சியின் மூன்றாவது நாளான 27.07.2023ஆம் நாளன்று, தொல்காப்பியர் தமிழ்ச் சங்கத் தலைவர் புலவர் வெற்றியழகனார் கலந்துகொண்டு "அடிப்படைத் தமிழ் இலக்கணம்" குறித்துப் பயிற்சியளித்தார். அப்போது தமிழ் ஓர் இயற்கை மொழி. அதில் வலிந்து திணிக்கப்பட்ட இலக்கண அமைப்புகள் கிடையாது. தமிழில் காரணப் பொருள் இன்றி எந்த ஒரு சொல்லும் இல்லை. அதைத்தான் தொல்காப்பியர் "எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே" என்று குறிப்பிட்டுள்ளார். தமிழ் நம் தாய்மொழி என்பதால் அடிப்படைத் தமிழ் இலக்கணக் கூறுகள் நம் மூளையில் இயற்கையாகவே பதிந்திருக்கின்றன. அவற்றை முறையாக உணர்ந்து கொண்டால் தமிழ் இலக்கணம் எளிமையாகக் கை வரப்பெறும் என்று குறிப்பிட்டார்.

அவரைத் தொடர்ந்து முனைவர் மு. கனகலட்சுமி அவர்கள் "தமிழ் ஒலிப்புமுறை" குறித்து எடுத்துரைத்துத் தமிழைப் பிழையின்றிப் பேசவும் எழுதுவதற்குமான பயிற்சியை வழங்கினார். தொடர்ந்து, தமிழ்நாடு அரசு, மேனாள் மொழிபெயர்ப்புத் துணை இயக்குநர் முனைவர் கு. பாலசுப்பிரமணியன் அவர்கள், "மொழிபெயர்ப்பின் தேவைகள்" குறித்து விளக்கியுரைத்தார்.

நிறைவு நாளான (28.07.2023) செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித்திட்ட இயக்ககத்தின் இயக்குநர் முனைவர் கோ.விசயராகவன் அவர்கள் அரசு சான்றிதழ் வழங்கிச் சிறப்பித்தார்.

நிகழ்வில், அகப்பயிற்சி ஒருங்கிணைப்பாளர் திருமதி கு,சங்கீதா, அகரமுதலித் திட்ட இயக்கக அலுவலர்கள், பணியாளர்கள் உள்ளிட்டோர் கலந்துகொண்டனர்.

# அகரமுதலி இயக்ககத்தில் அகப்பயிற்சி !

## திருநின்றவூர், ஜெயா கலை அறிவியல் கல்லூரி

## மாணவ – மாணவியர் பயன் !





செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் அகப்பயிற்சித் (Internship programme) திட்டத்தின்கீழ், திருநின்றவூர் , ஜெயா கலை மற்றும் அறிவியல் கல்லூரித் தமிழ்த்துறை மாணவ – மாணவிகளுக்குக் கலைச்சொல்லாக்கம் மற்றும் தூயதமிழ்ப் பயன்பாடு குறித்த அகப்பயிற்சி 2023 சூலை 31 மற்றும் ஆகத்து 01, 09, 10, 11 ஆகிய ஐந்து நாள்களுக்கு வழங்கப்பட்டது. 31.07.2023ஆம் நாள் நடைபெற்ற தொடக்க நிகழ்வில், அகரமுதலி இயக்ககத்தின் இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் கலந்துகொண்டு, தாய்த்தமிழின் வளர்ச்சியும் பாதுகாப்பும் இளையதலைமுறையின் கைகளில் இருப்பதால், மாணவ – மாணவிகளிடம் தமிழார்வம் மட்டும் இருந்தால் போதாது என்றும், ஆர்வத்தைத் தாண்டிய தாய்மொழிப் பற்று எல்லோரிடமும் இருக்க வேண்டும் என்றும் தெரிவித்தார்.

பேச்சு மொழியாகவும், எழுத்து மொழியாகவும், திறன்பேசி – கணினி – குமுக வலைத்தளங்களின் கருத்துப் பரிமாற்ற மொழியாகவும் தாய்த்தமிழைப் பயன்படுத்தி, அம்மொழிப்பற்றை குடும்பத்தார், நட்புறவுகள் மற்றும் பொதுமக்களிடமும் கொண்டு சேர்க்க வேண்டும். அதனால் மொழிக்கலப்புக் குறைந்து, மொழிவளர்ச்சி முன்னெடுக்கப்படும் என்று கூறினார். தொடக்க நிகழ்வில் அகரமுதலி இயக்ககப் பதிப்பாசிரியர்கள், இயக்ககக் கண்காணிப்பாளர், உதவிப் பதிப்பாசிரியர், தொகுப்பாளர்கள், சுருக்கெழுத்துத் தட்டச்சர் உள்ளிட்டோர் கலந்துகொண்டனர். மாணவ – மாணவியர் ஒருங்கிணைப்புப் பணியினைத் தொகுப்பாளர் திருமதி செ.சாந்தி மேற்கொண்டிருந்தார். பயிற்சியின் இரண்டாவது நாளான 01.08.2023ஆம் நாளன்று, இயக்ககக் கண்காணிப்பாளர் திருமதி ஆ.மு.பிந்து அவர்கள் மாணவ – மாணவிகளுக்குத் தமிழ்க் கணியச்சு, கணினி பயன்பாட்டிற்கான அடிப்படைச் செய்திகள் குறித்துப் பயிற்சியளித்தார்.

அதனைத் தொடர்ந்து இயக்ககத் தொகுப்பாளரும், பயிற்சித் திட்ட ஒருங்கிணைப்பாளருமாகிய திருமதி ஜெ. சாந்தி அவர்கள், "தமிழ்க் கலைச்சொல்லாக்கம் (ம) மின்னகராதி" குறித்து விளக்கியுரைத்தார். அப்போது இன்றைய அறிவியல் தொழில்நுட்பக் காலத்தில் உலகத்தின் எந்த மூலையில் இருந்தாலும் அங்கிருந்தே பயன்கொண்டு அறிவை விரிவு செய்வதற்கும், நேரம் மற்றும் பொருட்செலவைக் குறைப்பதற்கும் மின்னகராதிகள் தேவை என்று எடுத்துரைத்தார்.

2023 ஆகத்து 11 ஆம் நாள் நடைபெற்ற அகப்பயிற்சியின் நிறைவுநாள் நிகழ்வில், மாணவ – மாணவிகளுக்கு அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் அரசு சான்றிதழ்கள் வழங்கி வாழ்த்துத் தெரிவித்தார்.

# அகரமுதலி இயக்ககத்தில் அகப்பயிற்சி !

## ஆவடி, மகாலட்சுமி மகளிர் கலை (ம) அறிவியல் கல்லூரி மாணவியர் பயன் !






செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் அகப்பயிற்சித் திட்டத்தின்கீழ் (Internship programme), ஆவடி, மகாலட்சுமி மகளிர் கலை (ம) அறிவியல் கல்லூரியின் இளங்கலைத் தமிழ் முதலாமாண்டு மாணவிகளுக்குக் கலைச்சொல்லாக்கம் மற்றும் தூயதமிழ்ப் பயன்பாடு குறித்து 7.08.2023 தொடங்கி 11.08.2023 வரை, அகப்பயிற்சிஅளிக்கப்பட்டது.

அகப்பயிற்சியின் நிறைவுநாள் நிகழ்வில் அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் மாணவ – மாணவியருக்கு அரசு சான்றிதழ்களை வழங்கிச் சிறப்பித்தார்.

11.08.2023 ஆம் நாள் நடைபெற்ற நிறைவு நிகழ்வில் பேசிய அகரமுதலி இயக்குநர், உலகின் தொன்மைமிகு மொழியாகவும், அறிவியல் மொழியாகவும், இயற்கை மொழியாகவும் விளங்குகின்ற தமிழ்மொழியை தாய்மொழியாகப் பெற்றதிலும், தமிழை முதன்மைப் பாடமாக எடுத்துப் பயில்வதிலும் மாணவர்கள் பெருமை கொள்ள வேண்டும். தமிழை உயிராக நேசிக்க வேண்டும், அதே வேளையில் பன்மொழி அறிவையும் பெருக்கிக் கொள்ள வேண்டும். பன்மொழி அறிவானது ஒப்பியல் ஆய்வுக்கும், மொழிபெயர்ப்புக்கும், காலத்தின் தேவையான கலைச்சொல்லாக்கத்திற்கும் மிகவும் உதவியாக அமைந்து, பைந்தமிழின் மேன்மைக்கும் மாணவ–மாணவியரின் வாழ்க்கை மேம்பாட்டுக்கும் பேருதவியாக அமையும். வீட்டிலுள்ளோரிடமும் நட்புகளிடமும் பிறமொழிக் கலப்பின்றிப் பேசுவதோடு அவர்களையும் அதற்குப் பழக்க வேண்டும். அடுத்த தலைமுறை குழந்தைகளுக்காவது அழகிய தமிழ்ப் பெயர்களைச் சூட்டச் செய்ய வேண்டும். தமிழிலேயே தலைப்பெழுத்திட்டுக் கையொப்பமிடுவதை இளைய தலைமுறை மாணவர்கள் கடமையாகக் கொண்டு கடைப்பிடிக்க வேண்டும். மொத்தத்தில் தமிழை இளைய தலைமுறை மாணவர்கள் தம் வாழ்வியலாகக் கொண்டு செயலாற்றி வெற்றிபெற வேண்டும் என்று வாழ்த்தி, மாணவ – மாணவியருக்கு அரசு சான்றிதழ்களை வழங்கிச் சிறப்பித்தார்.

நிகழ்வில், அகப்பயிற்சி ஒருங்கிணைப்பாளர்கள் திருமதி ஜெ. சாந்தி, திரு. கி.இராமர், மகாலட்சுமி கல்லூரித் தமிழ்த்துறை உதவிப் பேராசிரியர் அ. இஸ்பா, அகரமுதலித் திட்ட இயக்கக அலுவலர்கள், பணியாளர்கள் உள்ளிட்டோர் கலந்துகொண்டனர்.

# செய்தி நறுக்குகள்

## மாலை தமிழகம்

### திறன்பேசி, கணினி, குமுக வலைத்தளங்களின் கருத்து பரிமாற்ற மொழியாக தமிழை பயன்படுத்த வேண்டும்: கோ.விசயராகவன்



## தினமணி

### கல்லூரி மாணவர்களுக்கு கலைச்சொல்லாக்கப் பயிற்சி

**சென்னை, ஜூலை 24:** தமிழக அரசின் அகரமுதலித் திட்ட இயக்ககம் சார்பில் சென்னையில் உள்ள பட்டாபிராம் இந்து கல்லூரி மாணவர்களுக்கு கலைச்சொல்லாக்கம் மற்றும் தூய தமிழ்ப் பயன்பாடு குறித்த ஐந்து நாள் பயிற்சி முகாம் திங்கள்கிழமை தொடங்கியது.

இந்த முகாமில் சொற்குவை வலைதளத்தின் பயன்பாடு, கலைச்சொல்லாக்கத்தின்தேவை,மொழிக்காப்பில் அகராதிகளின் பங்கு, பிறமொழிக் கலப்பின்றித் தமிழ் பேசுதல், தமிழ் தட்டச்சு, கணினி பயன்பாட்டுக்கான அடிப்படைத் தகவல்கள் ஆகியவை குறித்து பல்வேறு பயிற்சிகள் வழங்கப்படவுள்ளன.

முகாமின் தொடக்க நிகழ்ச்சியில், 'தமிழின் வளர்ச்சியும் பாதுகாப்பும் இளையதலைமுறையின் கைகளில் இருப்பதால், மாணவர்களிடம் தமிழார்வம் மட்டும் இருந்தால் போதாது; ஆர்வத்தைத் தாண்டிய தாய்மொழிப் பற்று அனைவரிடமும் இருக்க வேண்டும்' என இயக்குநர் கோ.விசயராகவன் வலியுறுத்தினார். இதில், இந்து கல்லூரி தமிழ்த்துறை பேராசிரியர் ச.கண்ணதாசன், அகரமுதலி இயக்கக பதிப்பாசிரியர்கள், தொகுப்பாசிரியர்கள் உள்ளிட்டோர் கலந்து கொண்டனர்.

## மாலை தமிழகம்

### 203 கலைச் சொற்கள் வல்லுனர் குழு ஏற்பு



**கல்பாக்கம், ஜூலை 28-**

தமிழ்நாடு அரசு தமிழ் வளர்ச்சித் துறை, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி இயக்ககத்தின் தமிழ்க் கலைக்கழக 138வது கூட்டம் அகரமுதலி இயக்ககத்தில் இயக்குனர் கோ.விசயராகவன் தலைமையில் நேற்று [27ம் தேதி] நடைபெற்றது. கூட்டத்தில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் கு.பாலசுப்பிரமணியன்,அ.மதிவாணன்.நா.சு.சிதம்பரம் ஆகியோர் பங்கேற்றனர். உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத் தமிழ்மொழி(ம)மொழியியல் புல உதவிப் பேராசிரியர் முனைவர் நா.சுலோசனா,முனைவர் மு.கனகலட்சுமி தமிழ் ஆசிரியர், ஆ அரிமாப் பாமகன், நூல் மதிப்புரையாளர் கவிஞர் மெய்ஞானி பிரபாகரபாபு மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் கலந்து கொண்டனர். கூட்டத்தில் 203 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

## மாலை தமிழகம்

### அகரமுதலி இயக்கக அகப்பயிற்சி மாணவர்களுக்கு சான்றிதழ் அகரமுதலித்திட்ட இயக்கக இயக்குனர் விசயராகவன் வழங்கினார்



# செய்தி நறுக்குகள்



தினகரன்

தமிழ் மொழி வளர்ச்சிக்காக உருவான சொற்குவை திட்டத்தில்

## புதிய சொற்களின் எண்ணிக்கை 12 லட்சத்தைக் கடந்து சாதனை

தமிழக அரசின் முயற்சிக்கு பாராட்டு

பயனாளர்கள் 2 லட்சம் பேர்



மாலை தமிழகம்

## அறிவை விரிவு செய்ய மின்னகராதிகள் தேவை அகரமுதலி இயக்கக அகப்பயிற்சியில் தகவல்!

கல்பாக்கம், ஆக.3- தமிழ்நாடு அரசு தமிழ் வளர்ச்சித் துறை, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக அகப்பயிற்சித் திட்டத்தின்கீழ், திருநின்றவூர், ஜெயா கலை மற்றும் அறிவியல் கல்லூரித் தமிழ்த்துறை மாணவ - மாணவியருக்கு ஐந்து நாட்கள் அகப்பயிற்சி வழங்கப்பட்டு வருகிறது. இயக்ககத்தின் இயக்குநர் கோ.விசயராகவன் வழிகாட்டலின்படி கடந்த மாதம் 31ம் தேதி இந்த நிகழ்ச்சி தொடங்கியது. இதில் மாணவர்களுக்கு தமிழ்க் கணியச்சு, கலைச்சொல்லாக்கம், மின் அகராதியின் தேவை குறித்துப் பயிற்சியளிக்கப்பட்டது.

தமிழ்த்துறை இளங்கலை மூன்றாமாண்டு பயிலும் 10 மாணவ - மாணவியர் கலந்து கொண்ட இந்த பயிற்சியில் இயக்ககக் கண்காணிப்பாளர் ஆ.மு.பிந்து கலந்து கொண்டு மாணவ - மாணவியருக்கு தமிழ் கணியச்சு, கணினி பயன்பாட்டிற்கான அடிப்படைச் செய்திகள் குறித்து பயிற்சியளித்தார். தொடர்ந்து இயக்ககத் தொகுப்பாளரும், பயிற்சித் திட்ட ஒருங்கிணைப்பாளருமாகிய ஜெ. சாந்தி, 'தமிழ்க் கலைச்சொல்லாக்கம் (ம) மின்னகராதி' குறித்து விளக்கியுரைத்தார். அப்போது இன்றைய அறிவியல் தொழில்நுட்பக் காலத்தில் உலகத்தின் எந்த மூலையில் இருந்தாலும் அங்கிருந்தே பயன் கொண்டு அறிவை விரிவு செய்வதற்கும், நேரம் மற்றும் பொருட்செலவைக் குறைப்பதற்கும் மின்னகராதிகள் தேவை என்றும் அவர் எடுத்துரைத்தார். ஆக., 4ம் தேதி வரை இந்த பயிற்சி நடைபெறும்.



தினமணி

## அகராதியியல் ஆய்வு மலருக்கு கட்டுரைகளை அனுப்பலாம்

### அகரமுதலி இயக்ககம் அழைப்பு

சென்னை, ஆக.8: தமிழ் அகராதியியல் ஆய்வு மலருக்கு ஆர்வமுள்ள தமிழறிஞர்கள், தமிழார்வலர்கள், ஆய்வாளர்கள் செப்.15-ஆம் தேதிக்குள் கட்டுரைகளை அனுப்பலாம் என தமிழக அரசின் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் தெரிவித்துள்ளது.

இது குறித்து அந்த இயக்ககம் செவ்வாய்க்கிழமை வெளியிட்ட செய்திக் குறிப்பு: 'தமிழ் அகராதியியலின் தந்தை' என போற்றப்படும் வீரமாமுனிவரின் தமிழ்த் தொண்டைப் போற்றும் வகையில், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் மூலம் ஆண்டுதோறும் நவம்பர் 8-ஆம் நாள் தமிழ் அகராதியியல் நாளாகக் கொண்டாடப்படுவதோடு அன்றைய தினம் பன்னாட்டுக் கருத்தரங்கம் நடத்தப்பட்டு வருகிறது.

அந்த வகையில் நிகழாண்டுக்கான பன்னாட்டுக் கருத்தரங்கத்தில் பங்கேற்க ஆர்வமுள்ள தமிழார்வலர்கள், தமிழறிஞர்கள், ஆய்வாளர்கள், பேராசிரியர்கள் உள்பட அனைவரும் பின்வரும் பொருண்மைகளில் 5 பக்க அளவில் ஆய்வுக் கட்டுரைகளை இவ்வியக்ககத்துக்கு அனுப்பி வைக்க வேண்டும். பன்னாட்டுக் கருத்தரங்கத்துக்கு வழங்கப்படும் ஆய்வுக் கட்டுரைகளில் தேர்வுக்குழுவால் தெரிவுசெய்யப்படும் கட்டுரைகள் மட்டுமே 'தமிழ் அகராதியியல் நாள்' சிறப்பு ஆய்வு மலரில் இடம் பெறும்.

**தலைப்புகள் விவரம்:** 1. மின்னகராதி காலத்தின் தேவை, 2. கலைச்சொல்லாக்கமும் ஊடகத்துறையும், 3. வலை தளங்களில் கலைச்சொல் பயன்பாடு, 4. கலைச்சொல்லாக்கமும் மொழிவளர்ச்சியும், 5. கணினி தமிழ்வளர்ச்சியில் சிக்கல்களும் தீர்வுகளும், 6. தமிழ் பக்தி இலக்கியங்களில் காணப்படும் கலைச்சொற்கள், 7. ஓலைச்சுவடிகளில் காணப்படும் அருந்தமிழ்ச்சொற்கள், 8. கலைச்சொல்லாக்கமும் திரைத்துறையும், 9. தமிழில் மொழிக் கலப்பைக் களைதல், 10. வட்டார வழக்கில் சொல்லாக்கம், 11. தமிழ் அகராதியியலின் தோற்றமும் வளர்ச்சியும், 12. அகராதி வளர்ச்சியில் மேலைநாட்டினரின் பங்கு உள்ளிட்ட தலைப்புகளில் கட்டுரைகளை அனுப்பலாம்.

கட்டுரைகள் ஏ4 அளவில் ஐந்து பக்கங்களுக்கு மிகாமல் மருதம் ஒருங்குறி (யுனிகோடு) எழுத்துருவில், எழுத்தளவு 11 புள்ளி, வரி இடைவெளி 1.5-இல், சொற்செயலிக்கோப்பாக (Word Document file) agarathimalar2020@gmail.com என்ற மின்னஞ்சல் முகவரிக்கும், 'இயக்குநர், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம், நகர் நிர்வாக அலுவலக வளாகம், முதல் தளம், எண். 75, சாந்தோம் நெடுஞ்சாலை, மே.ரா.செ. நகர், சென்னை - 600 028' என்ற இயக்கக முகவரிக்கும் செப்.15-ஆம் தேதி மாலை 5 மணிக்குள் கிடைக்குமாறு அனுப்பிவைக்க வேண்டும்.

கட்டுரையாளர்கள் கட்டுரையுடன் தங்கள் முகவரி, கைப்பேசி எண், மின்னஞ்சல் முகவரி, கடவுச்சீட்டு அளவிலான (Passport size Photo) புகைப்படம், ஒரு பக்க அளவில் தன் விளக்கக் குறிப்பு ஆகியவற்றையும் கட்டாயம் இணைத்து அனுப்ப வேண்டும்.

மேலும், அனுப்பப்படும் ஆய்வுக் கட்டுரை இதற்கு முன் வேறு எந்த இதழ்களுக்கும் வழங்கப்படவில்லை என்ற உறுதிமொழியையும் தன்னொப்பமிட்டு (self attested) அனுப்ப வேண்டும். கட்டுரைகள் அடிக்குறிப்புகள் மற்றும் துணைநூற்பட்டியலுடன் அமைதல் வேண்டும் என அதில் தெரிவிக்கப்பட்டுள்ளது.



முதல் ஓசை

## தமிழ்த்துறை மாணவர்கள் தொழில்நுட்பப் புலமையையும் வளர்த்துக் கொள்ள வேண்டும்: அகரமுதலி இயக்கக இயக்குநர் அறிவுறுத்தல்!



தமிழ்நாடு அரசு



## செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்

நகர் நிருவாக அலுவலக வளாகம், முதல் தளம்,
எண்: 75 சாந்தோம் நெடுஞ்சாலை, மே.ரா.செ.நகர், சென்னை – 600028.
044–29520509 agarathimalar2020@gmail.com

# தமிழ் அகராதியியல்நாள் விழா – 2023
# ஆய்வு மலருக்குக் கட்டுரைகள் வரவேற்கப்படுகின்றன !

**பொருண்மைகள் :** 1.மின்னகராதி காலத்தின் தேவை 2.கலைச்சொல்லாக்கமும் ஊடகத்துறையும் 3.குமுக வலைத்தளங்களில் கலைச்சொல் பயன்பாடு 4.கலைச்சொல்லாக்கமும் மொழிவளர்ச்சியும் 5.கணினித் தமிழ்வளர்ச்சியில் சிக்கல்களும் தீர்வுகளும் 6.தமிழ்ப் பத்தி(பக்தி) இலக்கியங்களில் காணப்படும் கலைச்சொற்கள் 7.ஓலைச்சுவடிகளில் காணப்படும் அருந்தமிழ்ச்சொற்கள் 8.கலைச்சொல்லாக்கமும் திரைத்துறையும் 9.தமிழில் மொழிக் கலப்பைக் களைதல் 10.வட்டார வழக்கில் சொல்லாக்கம் 11.தமிழ் அகராதியியலின் தோற்றமும் வளர்ச்சியும் 12.அகராதி வளர்ச்சியில் மேலைநாட்டினரின் பங்கு உள்ளிட்ட தலைப்புகளில் கட்டுரைகளைக் கணியச்சு செய்து மேற்கண்ட இயக்கக மின்னஞ்சலுக்கு 15/09/2023–ஆம் நாள் மாலை 5மணிக்குள் அனுப்ப வேண்டும். கட்டுரையினை ஏ4 அளவில் ஐந்து பக்கங்களுக்கு மிகாமல் ஒருங்குறி (யுனிக்கோடு) எழுத்துருவில், எழுத்தளவு11, வரி இடைவெளி 1.5–இல், சொற்செயலிக்கோப்பாக (Word Docoment file) அனுப்புமாறு கேட்டுக் கொள்கிறோம். கட்டுரைகள் தேர்வு (ம) சுருக்கத்தில் தேர்வுக் குழுவினரின் முடிவே இறுதியானது. முகவரி, தொலைபேசி எண், மின்னஞ்சல் முகவரி, ஒளிப்படம், தன்விளக்கக் குறிப்பு ஆகியவை கட்டாயம் கட்டுரையுடன் இணைத்து அனுப்ப வேண்டும்.

இயக்குநர்

# அகரமுதலி இயக்ககம் நெறிப்படுத்தும் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம்!

" வெளியுலகில் சிந்தனையில் புதிது புதிதாக
விளைந்துள்ள எவற்றினுக்கும் பெயர்களெலாம் கண்டு
தெளிவுறுத்தும் படங்களொடு சுவடியெலாம் செய்து
செந்தமிழைச் செழுந்தமிழாய்ச் செய்வதுவும் வேண்டும்!"

– பாவேந்தர் பாரதிதாசன்

இன்றைய அறிவியல் தொழில்நுட்ப உலகில் நாள்தோறும் பெருகிவரும் பல்வேறு துறைசார்ந்த, பிறமொழிச் சொற்களுக்கு இணையான தமிழ்க்கலைச்சொற்களை உடனுக்குடன் வடிவமைத்து, மக்களின் பயன்பாட்டிற்குக் கொண்டுவருவது தமிழ்மொழியின் சொல்வள மேம்பாட்டிற்குரிய முகாமையான பணியாகும்.

புறநிலையில் உள்ள சொல்லாக்க வல்லுநர்களிடமிருந்தும் பல்வேறு துறைசார்ந்த கலைச்சொற்களைப் பெற்று, ஆய்ந்து சொற்குவையில் சேர்த்து, தமிழின் கலைச்சொல் வளத்தை உயர்த்தும் நோக்கில், தமிழ்நாடு அரசின் சீரிய நெறிப்படுத்தலின்கீழ், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தால் 2021 அக்டோபர் 1ஆம் நாளிலிருந்து வெள்ளிதோறும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம் நடத்தப்பெறுகிறது. இப்பயிலரங்கத்தின் 93–98 வரையிலான அமர்வுகள் 2023 சூலை 07, 14, 21, 28, ஆகத்து 04, 11 ஆகிய நாள்களில் நடைபெற்றன. பயிலரங்க அமர்வுகளில் அயல்நாட்டு அறிஞர்கள், உள்நாட்டு அறிஞர்கள் பங்கேற்று பல்வேறு துறைசார்ந்த தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரையாற்றினர்.

சொல்லாய்வாளர்கள், சொல்லாக்க அறிஞர்கள், தமிழார்வலர்கள், ஆய்வாளர்கள், பேராசிரியர்கள் உள்ளிட்ட பலர் பங்கேற்றும் பார்த்தும் பயன்பெற்றனர். கலைச்சொற்களை அறிமுகம் செய்த சொலாக்க அறிஞர்களுக்கும், பங்கேற்பாளர்களுக்கும் இயக்ககத்தின் சார்பில் பாராட்டுச் சான்றிதழ்களும் பங்கேற்புச் சான்றிதழ்களும் வழங்கப்பட்டன.

அமர்வுகளில் பங்கேற்கும் அறிஞர்களின் ஒருங்கிணைப்பினைப் பாரிசு பன்னாட்டு உயர்கல்வி தமிழாய்வு நிறுவன இயக்குநர் முனைவர் பேரா. ச. சச்சிதானந்தம் அவர்களும், தொழில்நுட்ப ஒருங்கிணைப்பினைச் சென்னை வேல்ஸ் அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்த்துறை இணைப் பேராசிரியர் முனைவர்

இரா. பன்னிருகைவடிவேலன் மற்றும் இயக்கக உதவிப் பதிப்பாசிரியர் திரு. ஏ. காந்தி ஆகியோரும் மேற்கொண்டனர்.

## 07.07.2023ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்



**மரு. முனைவர் சிவா தியாகராஜா**
ஒருங்கிணைப்பாளர், வரலாறு (ம)
பாரம்பரியப் பிரிவு,
தமிழ்த் தரவல் நடுவம், இங்கிலாந்து



**திரு. ம.மு. ரெங்கசாமி**
திரைப்பட ஒளிப்பதிவாளர்,
ஆவணப்பட இயக்குநர், சென்னை



**மரு. விக்டர் ஜோன் பிகுராடோ**
கனடா



**கவிஞர் இர. தேன்மொழி**
தமிழார்வலர்,
பெங்களூர்



**பேரா. மரு. மு. செம்மல்**
முதன்மை அறிவியல் மதியுரைஞர்,
மெய்நிகர் அறிவியல் தமிழிருக்கை,
சவுதி அரேபியா

## 14.07.2023ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்



**பேரா. முனைவர் பெ. ஹரிபாலன்**
ஹன்யாங் பல்கலைக்கழகம்,
சீயோல், தென்கொரியா

**பேரா. முனைவர் மா. மாதரி**
முன்னை புல முதன்மையர்,
வணிகவியல் துறை, கோயம்புத்தூர்





**பொறிஞர் பத்மப்ரியா இராகவன்**
இயக்குநர், டிவைன் இந்தியா நிறுவனம்,
பாரிசு

## 21.07.2023ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்



**திரு. இரா. திருமாவளவன்**
தேசியத் தலைவர், மலேசியத்
தமிழ்நெறிக் கழகம்,
மலேசியா



**கவிஞர் மெய்ஞானி பிரபாகரபாபு**
உரையாசிரியர், நூல் மதிப்புரையாளர்
சென்னை



**முனைவர் மெய். சித்ரா**
தலைவர், தமிழ்ப் பண்பாட்டு இயக்கம்,
ஆங்காங்



**திருமதி சுமதி கோவிந்தராஜன்**
இணை நிறுவனர்,
பார்த்தா வள நிதி நெறிப்படுத்து நிறுவனம்
சென்னை



**பொறிஞர் அகணி சுரேசு**
எழுத்தாளர், கனடா

## 28.07.2023ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்



**பேரா. மரு. போல் யோசெஃப்**
மேனாள் பேராசிரியர், கனடா



**முனைவர் ஆ. அரிமாப் பாமகன்**
மேனாள் ஆங்கில விரிவுரையாளர்,
புதுச்சேரி



**முனைவர் பேரா. க. இரகுபரன்**
மொழித்துறை,
தென்கிழக்குப் பல்கலைக்கழகம்,
இலங்கை



**திரு. கோமதி நாயகம்**
தலைவர், கோழிகள் நலம்,
சுகுணா கோழியின மேலாண்மைக்
கல்லூரி, உடுமலைப்பேட்டை



**திரு. ஈழன் இளங்கோ**
திரைப்பட இயக்குநர்
அவுசுதிரேலியா

## 04.08.2023 ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்



**முனைவர் மெய். சித்ரா**
தலைவர், தமிழ்ப் பண்பாட்டு இயக்கம்,
ஆங்காங்



**திரு. நா. சு. சிதம்பரம்**
ஆசிரியர் – "அறிவியல் ஒளி"
திங்களிதழ்,
சென்னை



**முனைவர் ஜெ. வினாயகம்**
பொருளாளர், தைவான் தமிழ்ச் சங்கம்,
தைவான்



**நற்றமிழ்ப் பாவலர்**
**மறத்தமிழ் வேந்தன்**
மாநிலத் தலைவர்,
தமிழ் மீட்சிப் பாசறை, போரூர்.

## 11.08.2023 ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்



**திரு. இரா. திருமாவளவன்**
தேசியத் தலைவர்,
மலேசியத் தமிழ்நெறிக் கழகம்,
மலேசியா

**முனைவர் சு.சந்திரசேகரன்**
புலநெறிப் பேராசிரியர், தகவல் நுட்பத் துறை.
பாரதியார் பல்கலைக்கழகம், கோயம்புத்தூர்.





**திருமதி நாச்சியார் அருள்**
நிறுவுநர், தமிழ் ஆப்பிரிக்கா அமைப்பு
தான்சானியா, கிழக்கு ஆப்பிரிக்கா

# அறிஞர்கள் வழங்கிய கலைச்சொற்களுள் சில...

**மரு. முனைவர் சிவா தியாகராஜா**

| | | |
|---|---|---|
| Hand axe | – | கைக் கோடரி |
| Cleaver | – | பிளப்பிகள் |
| Stone Flakes | – | கற்செதிள்கள் |

**மரு. விக்டர் ஜோன் பிகுராடோ**

| | | |
|---|---|---|
| Goalie | – | அரணி /அரணர் |
| Sweeper | – | சூழாளர் |
| Goal | | எய்வு / அடைவு |

**பேரா. மரு. மு. செம்மல்**

| | | |
|---|---|---|
| Abarthrosis | – | அசையும் மூட்டு / அசைகின்ற மூட்டு வகை |
| Abandon | | புறக்கணித்தல் / ஒதுக்கிவைத்தல் |
| Abdominal cramp | – | வயிற்றுச்சுளுக்கு / வயிற்றுப் பிடிப்பு / வயிற்று இறுக்கம் |

**திரு. ம.மு. ரெங்கசாமி**

| | | |
|---|---|---|
| Lavalier microphone | – | ஆடைமறை ஒலிவாங்கி |
| Bloopers | – | ஏளனக்காட்சிகள் |
| Cash Cow movies | – | ஈட்டலுறுதிப் படங்கள் |

**கவிஞர் இர. தேன்மொழி**

| | | |
|---|---|---|
| Nanny care | – | மகவுப் பேண் செவிலி / ஆயாம்மா |
| Fracture Management | – | முறிவு மேலாண்மை |
| Baby Care | – | மழலையர் பேணகம் / குழந்தைகள் காப்பகம் |

**பேரா. முனைவர் பெ. ஹரிபாலன்**

| | | |
|---|---|---|
| Anuria | – | சிறுநீரின்மை |
| Nocturia | – | நள்ளிரவு சிறுநீர் அலைக்கழிப்பு |
| Oliguria | – | சிறுநீர் குறைதல் / சிறுநீரற்றல்/ சிறுநீர்வற்றல் |

**பொறிஞர் பத்மப்ரியா இராகவன்**

| | | |
|---|---|---|
| Disruptopreneur | – | புத்தொழில் முனைவோர் |
| Innovitis | – | புத்தாக்கழற்சி |
| Technoception | – | புத்தறிவேற்பு |

**பேரா. முனைவர் மா. மாதரி**

| | | |
|---|---|---|
| Randomisation | – | சீரற்ற தேர்வு |
| Formulative research | – | முறையான ஆய்வு |
| Dichotomous questions | – | இருநிலைக் கேள்விகள் |

**திரு. இரா. திருமாவளவன்**

| | | |
|---|---|---|
| Mirror | – | காணாடி |
| Spectacles | – | கண்ணாடி |
| Moderation Management | – | தணவு மேலாண்மை |

**முனைவர் மெய். சித்ரா**

| | | |
|---|---|---|
| molcajete | – | இடிகல் |
| paletas / popsicles | – | கனிப்பனிக்குச்சி |
| tatemadas | – | காய்க்கலவை |

**பொறிஞர் அகணி சுரேசு**

| | | |
|---|---|---|
| Sloping Prisms | – | அணைநீர் வழிகால் |
| Close economic policy | – | முற்றுப் பொருளியல் கொள்கை |
| Anger stuffers | – | சினங்காப்போர் |

**கவிஞர் மெய்ஞானி பிரபாகரபாபு**

| | | |
|---|---|---|
| Boodle | – | தீயவழிச் செல்வம் |
| Dead Duck | – | பயனிலி |
| Dedrology | – | மரவியல் |

**திருமதி சுமதி கோவிந்தராஜன்**

| | | |
|---|---|---|
| Anthrosol | – | மாந்தவினை மண் |
| Side –Scan Sonar | – | பக்கவாட்டு ஒலிவுணர்வி |

| | | |
|---|---|---|
| Ecofacts | – | இயற்கையெச்சங்கள் / கரிம எச்சங்கள் |
| **பேரா. மரு. போல் யோசெஃப்** | | |
| Eruption | – | பொக்குளம் |
| Boil | – | கொப்புளம் |
| Urticaria | – | செந்தடிப்பு |
| **முனைவர் பேரா. கனகசபை இரகுபரன்** | | |
| Editor– | – | பதிப்பாசிரியர்/ செவ்விதாக்குநர் |
| Editing | – | செவ்விதாக்கம் |
| Authorship | – | படைப்புரிமை |
| **திரு. ஈழன் இளங்கோ** | | |
| Herbal Feast Hospitality/ Healthy Food Hospitality | – | மருந்தோம்பல் |
| Sweet Basil | – | சீமைத்துளசி |
| Hospitality Feast | – | விருந்தோம்பல் |
| **முனைவர் ஆ. அரிமாப் பாமகன்** | | |
| C T scan | – | கணினி உடற்கூற்றுப் படம் |
| Smart phone | – | செம்மைப் பேசி/ செம்பேசி |
| Ego | – | யான்மை |

| | | |
|---|---|---|
| **திரு. கோமதி நாயகம்** | | |
| Acarology | – | எண்கால் உண்ணியியல் |
| Carrier host | – | நோய் பரப்புயிரி |
| Ascaris | – | பெருங்குடல் உருளைப்புழு |
| **திரு. இரா. திருமாவளவன்** | | |
| Cromatherapy | – | நிறப்பண்டுவம் / குருமப் பண்டுவம் |
| Crimson | – | குருதியம் (குருதிநிறம்) |
| Virtual Reality | – | மயவல் தோற்றம் |
| **திருமதி நாச்சியார் அருள்** | | |
| Bulimia | – | மிகுபசி / மிகைப்பசி |
| Onesies | – | முழு உடுப்பு |
| Homeostatis | – | ஒத்திசைவு |
| **முனைவர் சு. சந்திரசேகரன்** | | |
| Large Language Model (LLM) | – | நெடுமொழி மாதிரி (நெ.மொ.மா.) |
| Long Range (LoRa) | – | நெடு தொலைவு (நெ.தொ.) |
| Over The Air (OTA) | – | வளி வழி வந்த (வ.வ.வ.) |

# எது சரி? நூல்களா? நூற்களா?

நூல்களே முறையாகும். செந்தமிழில் எழுதுவதாக எண்ணிக்கொண்டு நூற்கள் எனப் பலர் எழுதிவிடுகின்றனர். நமது கால்களைக் காற்கள் ஆக்கலாமா? உழுகின்ற சால்களைச் சாற்களாக்குவதா? கால்கள், வேல்கள், தோல்கள் இருக்கவும் நூல்கள் நூற்களாவது மிக நன்றாக எழுதுவதாக எண்ணிக்கொண்டு செய்யும் தவறு!. அதைத் தவிர்க்க வேண்டும். நூல்கள் என்றே எழுத வேண்டும். பெரியவர்களே செய்தாலும் தவறு தவறே!

நன்றி : உங்கள் தமிழைத் தெரிந்துகொள்ளுங்கள்